


சமய வழிபாட்டின் ஒரு அங்கமாக இருந்து வருகிறது இந்திய பாரம்பரிய நட்டனம். அசைவிலே அழகு. இசையிலே எழில்—எல்லாம் இறைவனுக்கு அர்ப்பணம். பண்ணும் இசையும் பாரதக் கலைக்கு பெருமை தேடித் தருகின்றன. எல்லாம் இறைவனின் திருவடிகளில் சரணடைகின்றன. சிவனே நர்த்தனம் புரிந்த நடனக் கடவுள் தானே. சிவதாண்டவம் உலகத்தின் அசைவுக்கு ஒரு சின்னமல்லவா?

இதைப் போலவே தாவண்கரே பருத்தி ஆலையில் நாங்கள் கற்பனைக்கும் எட்டாத நயத்துடன் தரமுள்ள துணிமணிகளை பாரம்பரிய கலை வடித்துத் தருகிறோம். ஒவ்வொருவரின் ரசனைக்கேற்ப எழிலான நெசவும் இழையின் கைதேர்ந்த இணைப்பும் எல்லோரையும் வியப்பில் ஆழ்த்தும்.

ஒடிஸ்ஸி ஒரிஸ்ஸாவில் கி.பி. இரண்டாவது நூற்றுண்டின் ராணி கும்பா குகைகளில் தொல்பொருள் ஆராய்ச்சியை அடிப்படையாகக் கொண்ட புராதன இந்திய நடன பாணி என்று சொல்லப்படுகிறது. ஏழாவது நூற்றுண்டின் பழைய கால கோவில்களிலிருந்து பதினைந்தாவது நூற்றுண்டு வரையுள்ள கோவில்களை எடுத்துக் கொண்டால் நடனக் கலை கல்லில் செதுக்கப்படாத கோவில் ஒன்றுகூட ஒரிஸ்ஸாவில் இல்லையென்று சொல்லலாம். கலிங்காவில் அதற்குப் பிறகு ஆண்ட மன்னர்கள் கோவில் சடங்கு முறையாக கோவில்களுக்காக நடனங்களைப் பேணிக்காத்து வந்தார்கள். பாணியில் பரத நாட்டியத்தை ஒத்திருந்தாலும், அதற்கே உரிய, நிர்மாணமான பண்புச் சிறப்புக்களை உடையது ஒடிஸ்ஸி நாட்டியம். மற்ற வகை நடன பாணிகளில் காணப்படாத "த்ரிபங்கா" ஒடிஸ்ஸி நடனத்தின் குறிப்பிடத்தக்க நிலைகளில் ஒன்றுகும்.

நயமிக்க துணிமணிகள் எங்களது பரம்பரைச் சொத்து

# தாவண்கெரே

ஸ்ரீ தாவண்கரே காட்டன் மில்ஸ் லிமிடெட், தாவண்கரே-577 002

ஷோரூம்

காவேரி பவன், பெங்களூர் 560 009, தாழ்ப்பேட்டை, ஹூப்ளி 580 020, தாவண்கரே 577 002

# Kalki Shopping Page

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at:*

**LAKSHMI MUSICALS**
(Air-conditioned)
No. 61, Usman Road
Madras-600 017
Phone: 444629/442290

ACIL BT 20/79

Admired for beauty
Bought for performance

**Bharat TV**

**Urvashi**



*Available at:*

**STANDARD ELECTRIC CO**
4, General Patters Road
Madras 2   Phone: 811588

ACIL BT 23/79



**SHOWROOM 1**
**EXCLUSIVE**

**BINNY'S**

**Entire range of BINNY TEXTILES including silks.**



**VENKATESH VASTRALAYA**
P. LTD.

State Bank of Mysore Blg.
Opp. High Court,
Madras 600 001
Phone: 20201/2

**Buy the Best VV Vest**

Fully fashioned VV Vests are designed to suit any age every chest!

Available in all leading stores

VV Vests & Agencies
176, Appu Mudali Street,
Mylapore, Madras-600 004
Phone: 72652

# கனவு நினைவாகிறது

கண் நிறைந்த கணவனை
அடைய வேண்டும், அவர்தம்
கண்ணிற்கு விருந்தாக
சாரதா'ஸின் பட்டுப்
புடவையில் தன் அழகு
மிளிர வேண்டும் என
எண்ணும் கன்னியரின்
கனவை நினைவாக்குகிறது
சாரதா'ஸ்.
அழகு மிக்க சாரதாஸின்
திருமண பட்டுப் புடவைகள்
மங்களகரமான



# சாரதா'ஸ்

(முகூர்த்தப் பட்டு புடவைகளுக்கு அதிர்ஷ்டமான இடம்)

| | |
|---|---|
| தன் பில்டிங் | |
| மவுண்ட் ரோடு | N.S.B. ரோடு |
| சென்னை-600 002 | திருச்சி-620 002 |
| போன் : 87177 | போன் : 27077 |

# காலேஜ் ஃபாஷன்கள்

உரையாடலில் பங்கு
பெறுவோர் :

1. ஆர். ஞானஸன் பாஷா
மருத்துவம் 2வது ஆண்டு
2. மிஸ் சுதா ராவ்
பி. ஏ. முதல் வருடம்
3. மிஸ் ஜயந்தி
எம். ஏ. (ஆங்கில இலக்கியம்)
முதலாண்டு
4. மிஸ் ஸ்வர்ணலதா மூர்த்தி
மருத்துவம் மூன்றுவதாண்டு
5. திரு. வி. கண்ணன்
எம். ஏ. (பொருளாதாரம்) முதலாவ
தாண்டு

ஜயந்தி: கல்லூரிகளிலேருந்துதான் ஃபேஷன் சினிமாவுக்குப் போகறதுன்னும், சினிமாலேருந்துதான் கல்லூரிகளிலே புதுப்புது ஃபேஷன் பரவறதுன்னும் குறிப்பிட்டுச் சொல்ல முடியாது. இரண்டு வகையிலேயும் இம்மாதிரி ஏற்படறது உண்டு. சில சமயங்களிலே இந்த ரெண்டு 'செக்ஷன்'லேயும் இல்லாமே எங்கேயோ ஆரம்பிச்சு கல்லூரி மாணவ மாணவியர்கள் மூலமா வேகமா பரவறதும் உண்டு.

கண்ணன்: ஃபேஷன் புதுசுப் புதுசா மாறறதுக்கு அடிப்படையா மூணு காரணங்களைச் சொல்லலாம். சௌகர்யத்தின் அடிப்படையிலே தோன்றுகிற ஃபேஷன், ஃபேஷனுக்காக உண்டாகற ஃபேஷன், அழகுபடுத்திக்கறதுக்காக உண்டாகற ஃபேஷன்னு பிரிச்சுடலாம். சௌகர்யத்துக்காக உண்டாகற ஃபேஷன் சீக்கிரமா மாறிடாது. உதாரணமா பெல்பாட்டம்...

ஞானஸன்: அப்படிச் சொல்லிட முடியாது. 'டைட்ஸ்' தெச்சுக்கறது கல்லூரிகளிலே மறுபடியும் ஃபேஷனா ஆரம்பிச்சு இருக்கு!

லதா: பட்... வேணும்னே பேன்டைக் கிழிச்சு விட்டுக்கறது, ஒட்டுப் போட்டுத் தெச்சுப் போட்டுக்கறது, அழுக்கான பேன்ட் ஷர்ட் போட்டுண்டு, எண்ணெய் தடவாமல் தலை மயிரைப் பயங்கரமாப் படர விட்டுண்டு வரது ஆகிய இதெல்லாம் கூட காலேஜ் பாய்ஸ் கிட்டே ஃபேஷனா பரவிண்டு வரது. கல்லூரிக்குப் படிக்க வர்றோம். இது மாதிரி அசிங்கமா, தராதரம் இல்லாமல் வரதை ஃபேஷன்னு எப்படி ஒத்துக்கறது? சகிச்சுக்கறது?

கண்ணன்: இந்த அசட்டுத்தனத்தை எல்லாரும் கடைப் பிடிக்கறதில்லே. சிலபேர் தான். இதை *Fash on for Fashion's Sake*னு சொன்னேனே, அந்த வகையிலே சேர்க்கலாம்...

ஜயந்தி: 'காலேஜ் கேர்ல்ஸ்' கிட்டே பெங்கால் காட்டன் சாரீஸும், ஷிஃபான் ஜார்ஜெட்டும்தான் லேட்டஸ்ட் பேஷன்!

கண்ணன்: புடவை ஃபேஷன் இதுமாதிரி அடிக்கடி மாறிண்டே போறதுனாலே ஒரு புடைவையை வாங்கிட்டு, சில மாசங்களுக்குள்ளாகவே அதை ஒதுக்கிட்டுப் புதுசா வாங்கற சூழ்நிலை உண்டாகறது! இதனால் எங்களைவிடப் பெண்களால்தான் பெற்றோர்களுக்கு அதிகச் செலவு!

லதா: அப்படிச் சொல்லிட முடியாது... எங்களுக்கு எந்த விதத்திலேயும் பாய்ஸ் குறைச்சலில்லே... வீட்டுலே சூழ்நிலை சரியில்லேன்னு 'கேர்ல்ஸ்' அட்ஜஸ்ட் பண்ணிண்டு போயிடுவோம்... ஆனா நீங்க அப்படி கிடையாது. எப்படியாவது சாதிச்சுக்கணும்னு பிடிவாதம் ஜாஸ்தி.

ஜெயந்தி: பாய் ஆர் கேர்ல், ஃபேஷனா இருக்கிறதுல தப்பில்லே... ஆனா அதனாலே

✖ இடமிருந்து வலம் கண்ணன், ஜெயந்தி, லதா, சுதா, ஞானஸன்,






குடும்பப் பொருளாதாரம் பாதிக்கப்படக் கூடாது!

**லதா:** *I am going to meet my girl friend in QMC Stella SIET* அப்படின்னு ஏதாவது கல்லூரியைக் குறிப்பிட்டுச் சொல்லிக்கறது பாய்ஸ்கிட்டே ஃபேஷனாப் போயிடுத்து...

**ஜெயந்தி:** அதோட மட்டுமில்லே... பரிச்சயமே இல்லாத ஒரு பெண்ணைப் பத்தி, 'நான் அவளோட இங்கே போனேன்... அங்கே போனேன்'னு கதை கட்டிச் சொல்லிண்டு தன்னையும் அவளையும் இணைத்துப் பேசிக்கிறது ஒரு ஃபேஷன்... நாலு பேர் நாலு விதமா பேச ஆரம்பிச்ச பிறகுதான் அவளுக்கே விஷயம் தெரிய வரும்... இதனால் அந்தப் பெண்ணுக்கு எவ்வளவு கெட்ட பெயர் என்று பாய்ஸ் நினைக்கிறது இல்லே...

**கண்ணன்:** நீங்க சொல்ற மாதிரி நடந்துக்கற 'பாய்ஸ்' இருக்காங்கன்னு ஒத்துக்கறேன். *But many girls do have boy friends...* பாய்ஸ் தங்களோட கேர்ல் ப்ரண்டைப் பற்றித் தங்கள் பிரெண்ட்ஸ் கிட்டே வெளிப்படையாச் சொல்லிக்கிறாங்க... ஆனா 'கேர்ல்ஸ்' அதைச் சொல்லிக்கிறது இல்லே!

**லதா:** தோழியோட பழகற மாதிரி ஒரு பெண் ஒரு தோழனோட (*Boy friend*) பழகறது தப்புன்னு நான் சொல்லலே. லைப்ரரிக்குப் போகறது, பாட விஷயங்களைப் பற்றி விவாதிக்கிறது · ஒருத்தருக்கு ஒருத்தர் உதவி செஞ்சுக்கறது போன்ற விஷயங்கள்லே நட்புறவோட ஒரு பெண்ணும் பையனும் பழகலாம். *In fact* ஒன்னா சினிமாவுக்குப் போகறதுலே கூடத் தவறு கிடையாது... ஆனா அந்த உறவு முறை நட்பின் எல்லையைத் தாண்டிப் போய்விடக்கூடாது!...

**ஜெயந்தி:** மனவுறுதி இல்லாத சில பெண்கள் இதுமாதிரி வரையறைக்குள்ளே நடந்துக்காமே தப்பான வழியிலே போயிடறதுனாலேதான் *Boy friends*னாலே எல்லாரும் தப்பா நினைக்கறாங்க... பாய்லாம் இந்த *Spirit*ஐ உணர்ந்துண்டு நடக்கணும்... கல்லூரிப் படிப்பின் போது ஒவ்வொரு ஆண்டு ஒவ்வொரு பாய் பிரண்டோட பழகற கேர்ல்ஸைப் பத்தி எனக்குத் தெரியும்... *We can't say they are bad.*

**கதா:** வருஷத்துக்கு ஒரு பாய் ஃபிரெண்ட் என்ன? *There are girls who change their boy friends every seme ster!*

**லதா:** நிறைய சிகரெட் பிடிக்கறது போதைப் பொருள்களை உபயோகிக்கறது ஆகியவையெல்லாம் கூட காலேஜ் ஃபேஷனா இப்போ இருக்கு! இவைகள்னாலே உடல் நலம் எந்த அளவுக்குப் பாழாகிறதுன்னு நினைக்கவே மாட்டான்றாங்களே!

**கதா:** பெண்கள்லே சிலபேர் கூட இந்தப் பழக்கங்களுக்கு அடிமையா இருக்காங்க! ஃபாரின் ஸ்டுடண்ட்ஸ் கிட்டேந்து ஹாஸ்டல் மாணவர்கள் மூலமாகத்தான் போதைப் பொருள் பழக்கங்கள் அதிகமா பரவறது. சில ஹாஸ்டல் மாணவர்கள் தங்கள் அறைகளிலே மண்தொட்டிகளிலே கஞ்சா போன்றவற்றை வளர்க்கிறார்கள். சைக்கிள் ரிக்ஷாக்காரர்களில் சிலர், சின்ன பெட்டிக் கடைக்காரர்கள் போன்று சிலர் போதைப் பொருள்களை 'சப்ளை' செய்கிறார்கள். சில பாய்ஸ் குடிக்கவும் செய்யறாங்க.

**ஜெயந்தி:** ஃபேஷன்ற பேரிலே இவை எல்லாம் மாணவ சமுதாயத்துக்கு அபகீர்த்தியைத்தான் கொண்டு வருகின்றன!

**கண்ணன்:** பேசற முறையிலே பெண்கள் கிட்டே இப்போ என்ன ஃபேஷன்னு சொல்லுங்களேன்!

**ஜெயந்தி:** முழுப்பெயரை சுருக்கி *Nalini*ன்றதை *Nals* என்று, *Nitya*ன்றதை *Niths* என்று *Kalyani*ன்றதை *Kals*ன்னு கூப்பிடறது ஒரு ஃபேஷன். ஒருத்தரை ஒருத்தர் *Yaar*ன்னு கூப்பிடறது, ஆண்களைக் கூப்பிடுவது போல, 'டா' போட்டுக் கூப்பிடுவது ஒரு ஃபேஷன்!

**ஹாஸன்:** என்ன 'மச்சான்' என்ன 'மச்சி' என்ன 'வா' போ'லா', வா'லா,'ன்னு கூப்பிடறது பாய்ஸ் கிட்டே பாஷன்!

**கண்ணன்:** 'புண்ணாக்கு'ன்னுகூட ஒருத்தரை ஒருத்தர் அழைக்கக்கறது உண்டு!

**ஜெயந்தி:** எதையாவது சொல்லிட்டுக் 'கம்மா' என்கிற தமிழ் வார்த்தையை

அழுத்தம் கொடுத்து 'Chumma'ன்னு சொல்றது கூட பாய்ஸ்கிட்டே ஃபேஷனா இருக்கு...

**கண்ணன்:** ஆமாம். *It is chumma...*

**லதா:** முன்பெல்லாம் தமிழ் சினிமா பார்க்கறது கல்லூரி மாணவ மாணவிகளிடையே ஃபேஷன் கிடையாது. ஆனா தற்போது ரஜினிகாந்த், கமலஹாசன், ஸ்ரீதேவி, லக்ஷ்மி போன்றவர்கள் நடிச்ச படங்கள் ரிலீஸ் ஆனவுடனே பார்த்துடறது ஃபேஷன்!

**ஹாஸன்:** பாலசந்தர், பாரதிராஜா போன்ற டைரக்டர்கள் படங்களைப் பார்க்கறது பாய்ஸ் கிட்டே பேஷனா இருக்கு!

**ஜெயந்தி:** க்ளாஸை கட் பண்ணிட்டு சினிமா போகிறது கூட பாய்ஸ் கிட்டே ஒரு ஃபேஷன்... இது மாதிரி சொல்லிண்டே போனால் எவ்வளவோ இருக்கு... 'ரேகிங்' செய்யறது கூட இருக்கு...

**ரங்கநாயகி:** கடைசியா உங்களை ஒரு கேள்வி கேட்க ஆசைப்படறேன்... இது மாதிரி ஃபேஷன்... ஃபேஷன்னு சொல்லிண்டு வாழ்க்கையின் மேம்போக்கான அம்சங்களி லேயே மனசை ஈடுபடுத்திண்டு இருந்தா கல்லூரிக்கு நீங்க போகறதுக்கு முக்கிய காரணமான படிப்பு பாதிக்கப் படுமே!

**கண்ணன்:** ஃபேஷனையும், படிப்பையும் தனித் தனியா வெச்சுண்டு பேஷன்னால படிப்பு பாதிக்கப்படாம காப்பாத்திக்கற மன முதிர்ச்சி எங்களுக்கு இருக்குன்னு என் னாலே சொல்ல முடியும். அந்த அளவு முதிர்ச்சி இல்லாதவங்க ஜாக்கிரதையாகத் தான் இருக்கணும்.

**சுதா:** சின்ஸியரா படிச்சுட்டு ஒரு வேளை பெயில் ஆயிட்டு செப்டம்பரில் எழுதும்படி இருந்தால் அதைப் பெரிசா எடுத்துக்காத தும் ஒரு ஃபேஷன்... *You know I pulled in economics. Writing again in September* என்று சாதாரணமா தான் 'ஸ்டு டெண்ட்ஸ்' எடுத்துக்கறாங்க!

உரையாடல் ஏற்பாடு: பி. ரங்கநாயகி.
புகைப்படம்: மன்னை மூர்த்தி


தமிழக முன்னேற்றச் சிறப்பிதழ்

வாசகர்கள் விரும்பும் தகவல்கள் துணுக்குகள் அனுப்பக் கடைசி தேதி. மே 28வ.

★

ஜாய் டாய் - கல்கி நடத்தும் குழந்தை களுக்கான கதை - கட்டுரை - ஓவியப் போட்டி முடிவு தேதி மே 15வ.

அனுப்ப வேண்டிய முகவரி:
ஆசிரியர் கல்கி, சென்னை - 32

மற்ற விவரங்களுக்கு ஏப்ரல் 15வ. இதழ் காண்க.


# கல்லூரி அகராதி



1. லைப்ரரி — சினிமா தியேட்டர்
2. டக்கர் டேம் — அழகான பெண்
3. கடலை விக்கறான் — நண்பர்களை விட்டுவிட்டுத் தனியாக ஒரு பெண்ணுடன் பேசுகிறான்
4. கோழி வியாபாரி — பெண் பின்னால் சுற்றுபவன்
5. 12th Edition — ஆபாசமான புத்தகங்கள் (மருத்துவக் கல்லூரியில் மட்டும் வழங்கும் சொல்)
6. நாய் வண்டி — லேடீஸ் ஸ்பெஷல் பஸ்
7. Nine — அம்மாஞ்சித்தனம் உள்ள கல்லூரி மாணவன்
8. Pulled — Failed in exam.
9. பிலா உட்றான் — அளக்கறான்
10. Bull shit — Foolish, Useless
11. கடவுள் மாமா — Religious Student
12. மாமன் — Sturdy but innocent
13. பேரியவன் — Jack of all arts

தொகுப்பு: கோகுலா.




பனமா ஹாட் ஃபாஷன்
பாதுகாப்பாகவும்
இருக்கே! ஆறு அடி
சுற்றளவுக்கு ஒரு ஆள்
கிட்ட நெருங்க
முடியலியே!


டார்லிங்! லாங் ஹேர்,
லைட் பர்ஸ், ஜீன்ஸ்,
ஹை ஹீல்ஸ், இதுக்காகத்
தானே உங்களை லவ்
பண்ணினேன்!...
அதெல்லாம்
ஃபாஷன் இல்லே!
ஹரே கிருஷ்ணா
இயக்கம் தான் ஃபாஷன்!


• அமெரிக்க சிஷ்யனை
வெச்சுக்கிறது ஒரு
ஃபாஷனாப் போச்சு!
• சுதி ஊதறத்துக்குமா?


நஷ்டத்தைப் பத்தி கவலை
இல்லை! ஆர்ட் பிலிம் எடுக்கறது
ஒரு ஃபாஷன்! 'ஒரு கொசு
ரத்த தானம் செய்கிறது'ன்னு
ஒரு பிலிம் எடுக்கப்
போறேன்!


சேலைகட்டிய பெண்மணி :-
அடக்க ஒடுக்கமா ஒரு ஸாரி
கட்டிகிட்டா என்ன? ஆம்பிளை
மாதிரி இப்படி ஆபாசமா
டிரஸ் பண்ணிக்கணுமா?
ஃபாஷனும் ஃபாஷன்...!

# ஃபாஷன் ஜோக்ஸ்!


நம்ம குர்ரைத
ஹை ஹீல்ஸ்
அடிச்சா தான் ஓடுது!


இந்த டீ ஷர்ட் தான்
இப்ப ஃபாஷன்
மாமா!
T.V.
தவணை
பணம்
கட்டி
விட்டீர்களா
?
I
LOVE
YOU


பாட்டிக்கு ஒண்ணும்
வயசாகல்லே!...
ஃபாஷனுக்குத் தான்
வயசாயிருச்சி!


மம்மி!..
ஃபாஷன் பாரேட்லே
எனக்குத் தான்
ஃபஸ்ட் ப்ரைஸ்!


விபூதிப் பட்டை
யும் குங்குமமும்
ஸ்டிக்கர்லே
ஆர்டர் கொடுத்து
தயார் பண்ணி
ஒட்டிக்கிறான்!
அதுதான் ஃபாஷன்!
வியர்வைக்கும்
கலையாது!




# எனக்குப் பிடித்த எட்டு உடைகள்

### 1 இங்கிலிஷ் மாக்ஸி

இந்த மாதிரி உடையை நீங்கள் பல ஆங்கிலப் படங்களில் பார்த்திருக்கலாம். நான் லண்டன் சென்றிருந்தபோது ஆசையுடன் வாங்கினேன்.

### 2 ஜீன்ஸ்

பார்க்கும் யாருக்கும் இது முரட்டுத்தனமாக இருப்பதாகத் தோன்றும். ஆனால் இதுபோல் சௌகரியமான உடை கிடையாது. வசதி மட்டும் இல்லை, சொகுசும் கூட. எங்கு வேண்டுமானாலும் இதை அணிந்து செல்லலாம். குறிப்பாக வெளிப்புறங்களில் வேலை, விளையாட்டு, பிக்னிக் போன்றவற்றுக்கு இது ஏற்றது.

### 3 ஜம்ப் சூட்

இது ஹெலிகாப்டர், விமானம் ஆகியவைகளிலிருந்து பாராசூட்டில் கீழே குதிப்பவர்கள் அணிந்து கொள்ளும் பாணியில் தைத்தது. இதை அணிந்து கொண்டு நானும் குதித்திருக்கிறேன், படிக்கட்டில் இரண்டாவது படியிலிருந்து. சீக்கிரத்தில் அழுக்காகக் கூடியது. காரணம் வெண்மையான நிறம். இதைப் பயணங்களுக்கு தான் பயன்படுத்துவது உண்டு.

### 4 புடவை

என்னதான் மேல்நாட்டுப்பாணி உடைகள் நம்மைக் கவர்ந்தாலும், புடவைக்கு ஈடாகுமா? அழகை எடுத்துக் காட்டவும், அழகைப் பாதுகாக்கவும் புடவைதான் சரியான உடை. மேல்நாட்டுப் பெண்மணிகள் நமது புடவையை அதிசயத்துடன் பார்த்து, ஆர்வத்துடன் அணிய இன்று தயாராயிருக்கிறார்கள்.











# ரமில் ராதிகா

### 5 இந்தோனேஷிய உடை

நான் எந்த நாட்டுக்குச் சென்றாலும் முதலில் அவர்களது உடையலங்காரங்களைத்தான் கவனிப்பேன். மாதிரிக்கு ஓரிரு உடைகளை வாங்கி வைத்துக் கொள்ளவும் செய்வேன். இந்த உடையை இந்தோனேஷிய மக்கள் அதிகம் அணிவார்கள்.

### 6 டின்னர் மாக்ஸி

இந்த உடை இரவு உணவின் போது மேல் நாட்டினர் அணிவது. இந்த உடையைத்தான் அதிகம் அவர்கள் விருந்துக்கு அணிந்து செல்வார்கள். வெண்மையான உடையில் சிகப்பு ரோஜாவை மார்பில் அணிந்து சென்றால் யாருமே ராணி மாதிரி தோற்றமளிப்பார்கள்.

### 7 ரஷ்ய மிடி

வேலைக்குச் செல்லும் பெண்மணிகள் கவனிக்க: எல்லாவிதமான அலுவலக வேலைக்கும் இந்த உடை ஏற்றது. இந்த உடையைப் பல வண்ணங்களிலும் உருவாக்கலாம். எம்ப்ராய்டரி வேலைகளையும் இதில் செய்து கொள்ளலாம். பெரிய வண்ணப் பூக்களை எம்ப்ராய்டரி செய்தால் யார் உங்களை ஃபாஷனில் மிஞ்ச முடியும்? ரஷ்யப் பெண்கள் இதை விரும்பி அணிகிறார்கள்.

### 8 ஃப்ராக்

இது குழந்தைகள் உடை. லண்டன் விளையாட்டு மைதானங்களில் சிறு பெண்கள் இந்த உடையுடன் நடந்து வரும் அழகும், விளையாடும் அழகும் மனம் கவரும். சர்வதேசக் குழந்தைகள் ஆண்டு ஆனதால் குழந்தைகள் உடையையும் அறிமுகப்படுத்துகிறேன். எனக்குப் பிடித்த எட்டு உடைகளில் முதல், இரண்டாவது இடங்களைப் பிடித்துக்கொள்பவை ஜீன்ஸும் டின்னர் மாக்ஸியும்தாம்.

பேட்டி, புகைப்படங்கள் — சலன்









# திருமலை - திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

## சர்வதரிசன நேரங்கள்

திருவேங்கடவனைத் தரிசனம் செய்ய வரும் பக்தர்களின் எண்ணிக்கை அபரிமிதமாகப் பெருகி வருகிறது. அனேகமாக எல்லா நாட்களிலும் பதினாறு மணிநேரம் சர்வ தரிசனத்துக்காக ஒதுக்கியுள்ளதும் போதுமானதாக இல்லை. ஏழுமலையானைத் தரிசனம் செய்து மகிழ க்யூவரிசையில் பலமணி நேரம் காத்துக் கிடக்க வேண்டியுள்ளது.

இப்படிக் க்யூ வரிசையில் காத்து நிற்கும் சேவார்த்திகளுக்குச் சௌகரியங்களைத் தர விசேஷமான ஏற்பாடுகளைத் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தார் செய்துள்ளார்கள். இந்த நிலையிலும் பக்தர்கள் க்யூவில் நிற்கும் நேரத்தைக் கணிசமாகக் குறைத்து ஒவ்வொரு நாளும் நிறையப் பக்தர்கள் தரிசனம் செய்வதற்கான வழிவகைகளைச் செய்து வருகிறது.

இவைகளையெல்லாம் மனதில் கொண்டு, கோயிலின் ஆகம சாஸ்திரப் பண்டிதர்கள், அர்ச்சகர்கள், ஜீயங்கார்கள் ஆகியோரின் ஆலோசனையையும் அனுமதியையும் பெற்று சர்வதரிசன நேரங்களை கீழ்க்கண்டவாறு மாற்றியமைத்திருக்கிறோம்.

| | | |
|---|---|---|
| ஞாயிறு — திங்கள்<br>செவ்வாய் — சனிக்கிழமைகளில் | — | காலை 6.00 மணி முதல் நள்ளிரவு 12.00 வரை பகல் 12.30க்கு இரண்டாவது நைவேத்தியத்துக்கும் இரவு 8 மணிக்கு இரவு கைங்கரியத்துக்கும் இடைவேளை. |
| புதன் கிழமைகளில் | — | காலை 8.00 மணி முதல் நள்ளிரவு 12.00 மணி வரை இரவு 8 மணிக்கு இடைவேளை — இரவு கைங்கரியத்துக்காக. |
| வியாழக் கிழமைகளில் | — | காலை 8.00 மணி முதல் நள்ளிரவு 12.00 வரை. இரவு 8.00 மணிக்கு பூலாங்கி சேவைக்காக இடைவேளை. |
| வெள்ளிக் கிழமைகளில் | — | காலை 10.00 மணி முதல் நள்ளிரவு 12.00 மணிவரை. இரவு 8.00 மணியளவில் இரவு கைங்கரியத்துக்காக இடைவேளை. |

**P.V.R.K. பிரசாத் I.A.S.**
**எக்ஸிக்யூடிவ் ஆபீசர்**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

Subra & Ram TTP

# கோ-ஆப்டெக்ஸ்க்கு அழகு சேர்க்கும் மாடல்கள்!

**கோ**-ஆப் டெக்ஸும் மாடலிங் கலையும் இணை பிரிக்க முடியாதவை; காரணம் இவர்களது விளம்பரங் களிலெல்லாம் அழகு நங்கையர்களின் அணிவகுப்பு இருப் பதுதான். கோ – ஆப்டெக்ஸ் ஜெனரல் மானேஜர் சீதா ராமன் என் கேள்விகளுக்குப் பதிலளிக்கையில் சொன்னார்:

''ஆரம்ப கால விளம்பரங்களில் நாங்கள் பெண் களின் புகைப்படங்களைப் போடவே இல்லை. வரிகளை மட் டும் அடுக்கி விளம்பரங்களை வெளியிட்டோம். பிறகு ஓவியங்களைச் சேர்த்துக் கொண்டோம். 1962ம் வருடம் தான் முதன் முதலில் பெண்களைப் புகைப்படம் எடுத்து விளம்பரத்தில் இணைத்தோம். அன்று விளம்பரத்தில் இடம் பெற்ற முதல் பெண்மணி யார் தெரியுமா? குமாரி கமலா தான்! இந்த விளம்பரம் 7–11–1962ல் வெளி வந்தது. அன்றிலிருந்து இன்றுவரை சுமார் 150 மாடல்கள் எங்களது விளம்பரங்களில் தங்களை இணைத்துக் கொண்டுள் ளார்கள்.

''150 ரூபாய் முதல் 1000ரூபாய் வரை மாடலிங் கட்டணமாக நாங்கள் அளிக்கிறோம். மாடலைப் பொறுத் துத் தொகை வேறுபடுகிறது. அவர்கள் உபயோகிக்கும் உடைகள் எல்லாவற்றையும் புகைப்படம் எடுக்கப்பட்ட வுடன் எங்களிடமே திருப்பித் தந்துவிட வேண்டும். எங்கள் விளம்பரங்களில் இடம் பெற்ற வனிதையர்கள் பலர் புகழ்பெற்ற நக்ஷத்திரங்களாகி விடுகிறார்கள். குமாரி கமலாவில் ஆரம்பித்த அந்த ராசி எம். என். ராஜம், பத்மினி, படாபட் ஜெயலட்சுமி, சுஜாதா, லக்ஷ்மி, மஞ்சுளா, விஜய பாபு, வடிவுக்கரசு, லட்சுமிஸ்ரீ ஆகிய வர்கள் வழியாகத் தொடர்ந்து ''புதிய வார்ப் புக்கள்'' ரதி வரை வந்திருக்கிறது.

எஸ்.ஆர். கருப்பண்ணன்
ஸ்பெஷல் ஆபீஸர்
கோ-ஆப்டெக்ஸ்

சீதாராமன்
ஜெனரல் மானேஜர்
கோ.ஆப்டெக்ஸ்





''டாலி''



புகைப்படக்காரர் சுந்தர் 'டாலி'யைப் படமெடுக்கிறார்.

''பண்டிகைக் காலங்களில் தானே சேலைகளுக்கும், துணிகளுக்கும் அதிக விளம் பரம் தேவை? அப்பொழுது தான் எங்களுக்கும் அதிக மாடல்கள் தேவை! வரு டம் ஒன்றுக்கு 10லிருந்து 15 முதல் மாடல்கள் தேவைப் படுகிறார்கள். மாடல்களைத் தேர்ந்தெடுப்



## ஏழு வயதில் உபன்யாசம்!

மங்கையர்க்கரசி என்கிற இந்த ஏழு வயதுச் சிறுமியைச் சாதாரணமாக வீட்டில் பார்ப்பவர்களுக்கு அந்த வயதுக்கேற்ற குழந்தைத்தனமான சேஷ்டைகளுடன் கூடிய ஒரு பெண்ணாகத்தான் தோற்றமளிக்கிறாள். ஆனால் அவளது அற்புத ஆற்றலும், சாதனைகளும் வியப்புக்குரியவை.

திருநெல்வேலியில் பிறந்த இவளுக்கு மூன்று வயதாகியிருந்த சமயம், உபன்யாசம் ஒன்றைக் கேட்டுக் கொண்டிருந்த இவள் நிகழ்ச்சி முடிந்ததும் விரிவுரை செய்தவர் சொன்னதையெல்லாம் ஒரு வார்த்தை விடாமல் அப்படியே மனப்பாடம் செய்தது போல் கட கடவென்று ஒப்புவித்து அவையோரைத் திகைக்க வைத்தாள். எப்படிச் சொன்னோம்? அவளுக்கும் புரியவில்லை. தெய்வ அருள் பெற்ற குழந்தை இவள் என்பதையறிந்த இவளது தந்தை பெரிய புராணத்தை ஓர் ஆசிரியர் அமர்த்தி இவளுக்குக் கற்றுக் கொடுத்தார். அன்று முதல் தமிழக புராண விரிவுரை செய்பவர்களில் பெரும் புகழ் பெற்று வரும் விந்தைக் குழந்தையாக மூலை முடுக்கெல்லாம் பெரியபுராணத்தின் பெருமையைப் பரப்பி வருகிறாள் மங்கையர்க்கரசி. வருடத்துக்கு நூறு நிகழ்ச்சிகளுக்கு மேல் நடத்தி வரும் மங்கையர்க்கரசி தனது நானூற்று முப்பத்து ஆறாவது சொற்பொழிவை சமீபத்தில் சென்னை வீனஸ் காலனி ஆஸ்திக சமாஜத்தில் நிகழ்த்தி அனைவரையும் அதிசயிக்க வைத்தாள். ஒரு முறை ஐந்து மணி நேரம் தொடர்ந்து உரையாற்றிய சாதனையையும் இவள் புரிந்திருக்கிறாள்.

— விஜய் நிர்மல்

பது. அவர்களது புகைப்படங்களை விளம்பரமாக்குவது, அந்த விளம்பரங்களைப் பத்திரிகைகளுக்குக் கொடுப்பது, ஆகிய எல்லா வேலைகளையும் எங்களது விளம்பர ஏஜண்டுகளான எவிகண்ட் பப்ளிசிடி கவனித்துக் கொள்கிறது. அவர்களிடம் புகைப்பட ஸ்டுடியோ, பிளாக் தயாரிக்கும் பகுதி, ஓவியப் பிரிவு ஆகிய எல்லாமே இருக்கின்றன.''

எவிகண்ட் பப்ளிசிடீஸ் கமலநாதனைச் சந்தித்துப் பேசிய போது அவர் சொன்னார்: ''பம்பாயில் தான் மாடலிங் கலைக்கு மதிப்பு அதிகம். இந்தியாவின் தலை சிறந்த மாடல்கள் பம்பாயில்தான் இருக்கிறார்கள் என்றால் அது மிகையில்லை.

''புகழ்பெற்ற மாடல் பெண்மணிகளின் திறமையைப் பயன்படுத்திக் கொள்வதை விடப் புதிய மாடல்களை உருவாக்கலாம் என்றால் அதில் நன்மையும் உண்டு சிரமங்களும் இருக்கிறது. கிட்டத்தட்ட சினிமாவில் வரும் புதுமுகங்களின் நிலைதான். மாடல் பெண்ணுடன் விளம்பரம் தயாராக வேண்டும் என்று எங்களிடம் கோரப்பட்டவுடன், முதலில் அந்த விளம்பரத்துக்கான பின்னணியைக் கவனிப்போம். எந்த மாதத்தில் வருகிறது? அந்த மாதத்தில் என்ன பண்டிகை வருகிறது? உதாரணத்துக்குப் பொங்கல் என்றால் நெற்கதிர்களையும் கிராமக் காட்சியையும் பின்னணியாகக் கொள்வோம். மாடலும் கிராம நங்கையாகத் தோற்றமளிப்பாள். இந்த முடிவை நான் மட்டும் எடுப்பதில்லை. எங்களது விஷுவலைஸர், காபி ரைட்டர், போட்டோகிராபர் ஆகிய மூவரும் என்னுடன் சேர்ந்து விவாதித்து முடிவு செய்கிறோம். விளம்பரத்தில் வரப்போகும் மாடலின் புகைப்படத்தை விளம்பரதாரரிடம் கொடுத்து (உதாரணத்துக்கு கோ-ஆப்டெக்ஸ் என்றால் அதன் ஸ்பெஷல் ஆபீசர், ஜெனரல் மானேஜர் ஆகியோர்) அவர் ஒப்புதலுடன் மாடலிங் செய்யச் செய்து புகைப்படம் எடுத்துக் கொள்வோம்.''



மாடலிங்கிற்குப் புகைப்படம் தானே முக்கியம்? எவிகண்ட் பப்ளிசிடீஸைச் சேர்ந்த எமினென்ட் ஸ்டுடியோவில் புகைப்பட நிபுணராக இருக்கும் ஜி. சுந்தர் கூறுகிறார்:

''புகைப்படம் எடுப்பது எப்படி ஒரு கலையோ அதைப் போல மாடலிங்-" என்பதும் ஒரு கலைதான்; இன்றைய இளம் பெண்கள் மாடலிங் செய்ய மிகவும் ஆர்வத்துடன் இருக்கிறார்கள் என்றாலும், ஏனோ உள்ளூற ஒரு தயக்கம், பெற்றோர்கள் என்ன சொல்வார்களோ, பெரியவர்கள் என்ன நினைப்பார்களோ என்ற அச்சம் இருக்கிறது. ஒரு மாடலைப் புகைப்படக்காரர் என்ற முறையில் பல்வேறு கோணங்களில் நான் பார்க்கிறேன். எந்தக் கோணத்தில் அவர் எடுப்பாக அழகாக

விளம்பரத்தில் தெரிவார், விளம்பரதாரருக்கும் பயன் தரும் என்று என்னுள் நான் முடிவு செய்து கொண்ட பிறகுதான் புகைப் படத்தையே எடுப்பேன். இன்டோரிலும் எடுப்போம். வெளிப்புறப் படப்பிடிப்பும் நடத்துவதுண்டு. சமீபத்தில் நாங்கள் கோ-ஆப் டெக்ஸுக்காக எடுத்த படத்திலிருப்பவர் 'டாலி.'''

கோ ஆப்டெக்ஸ் வெள்ளி விழா ஆண்டு விளம்பரத்தில் உள்ள டாலி கூறுகிறார்:

''நான் மாடலிங் செய்வதே பொழுது போக்குக்காகத்தான். எனக்கு சுமார் 14, 15 வயதிருக்கும் போது ஆதர்ச வித்யாலயாவில் நடந்த ஓர் அழகுப் போட்டியில் கலந்து கொண்டேன். ஏதோ கலந்து கொண்டேனே ஒழிய பரிசு கிடைக்குமென்றோ பாராட்டு கிட்டுமென்றோ நான் நினைக்கவேயில்லை. ஆனால் பங்கு கொண்ட அந்த முதல் அழகுப் போட்டியிலேயே நான் அழகு ராணியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டேன். அன்று ஆரம்பித்தது இன்னும் தொடர்ந்து கொண்டிருக்கிறது.

''இரண்டு வருஷங்களாக இம்மாதிரிப் போட்டிகளில் நான் அதிகம் பங்கு கொண்டு வருகிறேன். சென்னை, பம்பாய் ஆகிய நகரங்களில் நடந்த பல அழகுப் போட்டிகளில் நான் பங்கு கொண்டு பரிசுகளும் பெற்றிருக்கிறேன்.

''எனக்கு மேடைக் கூச்சமும் புகைப்படக் கூச்சமும் கிடையவே கிடையாது. கோ - ஆப்டெக்ஸ் துணிகளுக்கு மாடலிங் செய்தவர்கள் புகழ் பெறுவார்கள் என்பது நூற்றுக்கு நூறு உண்மை. நான் புகழ் பெற்றது மட்டுமல்ல, படங்களில் நடிக்கவும் அழைக்கப் பட்டேன். ஸ்டெல்லா மேரி கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கும் எனக்குப் படிப்புதான் முக்கியம். பிறகுதான் மற்ற எல்லாமே.''

பேட்டி: அசோக் குமார்

# அட்மிஷன் ஆஹ்ஹா..!



ஒருவர்: யார் சார் அவர்? எல்லோரும் அவருக்கு ரொம்ப மரியாதையா வணக்கம் சொல்றாங்க?

மற்றவர்: அவர் தான் இந்த ஸ்கூல் பியூன்.



ஒருவர்: என்ன சார், நிதி திரட்டிக் கொண்டிருக்கிறீர்கள்?

நண்பர்: ''பையனைக் காலேஜில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்றால் 1000 ரூபாய் டொனேஷன் தர வேண்டுமாம்! அது தான் டொனேஷனுக்காக நிதி திரட்டிக்கிட்டு இருக்கேன்.

வந்தவர்: தாழ்த்தப் பட்டவர்களுக்கு இவ்வளவு சீட், என்று வரிசையாகப் போட்டுவிட்டுக் கடைசியில் கே. ஜெ. சீட் 5 என்று போட்டிருக்கிறார்களே, என்ன சார் அது?

மெடிகல் காலேஜ் பிரின்ஸிபால்: கேஸ் போட்டு ஜெயிப்பவர்களுக்கு என்று தனியாக ஒரு ஐந்து ஸீட் ஒதுக்கி விட்டோம்.




— எஸ். சந்திரசேகர்



நெருக்கடி கால
கொடுமைகளை விசாரிக்க
விசேஷ நீதிமன்ற
மசோதா

பெரிய துரை இவரு!..
எங்கம்மா கையிலே ராங்
பண்றாரு! நம்ம கையிலே
ஒண்ணும்
வெச்சுக்காதே!
கீச்சு
புடுவேன்
கீச்சு!



இந்த உடம்பு
உங்களுக்குத் தாம்மா
உழைக்கும்!
அர்ஸ்
மந்திரவாதி
அர்ஸ்!

சந்திர
சேகர்

பகுகுணா

என் கலப்பையை
ஏன்
ஒடைச்சே?...

என் துப்பாக்கியை
ஏன்
ஒடைச்சே?...




கல்கி

1979 மே 13
சித்தார்த்தி சித்திரை 30
மலர்: 37 இதழ்: 41




தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற - எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.

# வீரப்பன் காட்டிய வீரம்!

விழுப்புரம் சம்பவங்களைப் பற்றி விசாரணை நடத்திய நீதிபதி சதாசிவம் அவர்களின் தீர்ப்பு வெளியாகியுள்ளது. நடைபெற்றது வகுப்புக் கலவரம் அல்ல என்ற அவரது கணிப்பு ஒரு நிம்மதிப் பெருமூச்சை எழுப்புகிறது. அதிகாரிகள் முன் எச்சரிக்கையுடன் தக்க சமயத்தில் செயல்பட்டிருந்தால் துயர நிகழ்ச்சிகளைத் தவிர்த்திருக்கலாம், வன்முறைகளில் சமூக விரோதிகள் ஈடுபட்டிருந்த போது போலீஸ், ரெவின்யூ அதிகாரிகள் செயலற்றுப் பார்த்துக் கொண்டிருந்தனர்; இச் சம்பவங்கள் நிகழ்ந்த போது தென் ஆர்க்காடு மாவட்டத்தில் இருந்த அதிகாரிகள் பலர் தங்கள் பணிகளுக்குப் புதியவர்களாக, முன் அனுபவம் அற்றவர்களாக இருந்தது துரதிருஷ்டமே என்றெல்லாம் தீர்ப்புக் கூறுகிறது. தீர்ப்பினை யொட்டிப் பல அதிகாரிகள் மீது அரசு நடவடிக்கையும் எடுத்துள்ளது.

அதிகாரிகள் பற்றி சதாசிவம் அவர்கள் கூறியுள்ளது ஓர் அமைச்சரவைக் கும் பொருந்தும். மாவட்டத்தின் முக்கிய அதிகாரிகள் பலரும் ஒரு கால கட்டத்தில் முன் அனுபவம் அற்றவர்களாகவே அமைந்ததற்கு யார் பொறுப்பு? அமைச்சரவைதான் தார்மீகப் பொறுப்பு ஏற்க வேண்டும். இந்த அமைச்சரவையும் தன் பணிகளுக்குப் புதியதாக, முன் அனுபவம் அற்றதாக அமைந்தது துரதிர்ஷ்டம்தான்.

அதிகாரிகள் முன் எச்சரிக்கையுடன் செயல்பட்டுத் தடுப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்று கருதப்படுவது போலவே அமைச்சரவையும் நடக்கப் போவது பற்றித் தீர்க்க தரிசனத்துடன் சிந்தித்து வருமுன் காக்கும் ஆற்றல் பெற்றிருக்க வேண்டும். தீப்பொறி காட்டுத் தீயாகப் பரவுமுன் அணைக்கப்படல் வேண்டும். இதுவே சாணக்கியம்.

இத்தகைய சாணக்கியத்தை இந்த ஆட்சியிடம் ஆசிரியர் போராட்டமாயினும் மாணவர் போராட்டமாயினும் வழக்கறிஞர் போராட்டமாயினும் விவசாயிகள் போராட்டமாயினும் இன்று வரை நாம் காணவில்லை.

விவசாயிகள் போராட்டத்தில் அரசியல் கலப்பு சிறிதும் இல்லை என்று நம்ப நாம் தயாராக இல்லை. வன்முறைகளைத் தூண்டிவிடும் சொற்பொழிவுகள் நிறையவே நிகழ்ந்திருக்கின்றன. ''சொல்லைச் செயலாக்கி யிருக்கிறார்கள்'' என்ற முதல்வரின் வாதத்தில் நியாயம் இருக்கிறது. விவசாயிகள் பிரச்னை குறித்து ஆராய அமைந்த உயர்மட்டக் குழுவில் இடம் பெற்று பின்னர் விலகிக் கொண்ட நாராயணசாமி நாயுடு, எம். ஜி. பாலசுப்பிரமணியம் தலைமையில் மறுபடியும் அமைந்த உயர்மட்டக் குழுவின் சிபாரிசுகள் வெளி வரும்வரை பெருந்தன்மையுடன் காத்திருந்திருக்கலாம். அவசரம் அவசரமாகப் போராட்டத்தில் இறங்கி வன்முறையைத் தூண்டிவிட அவசியம் இல்லைதான்.

ஆயினும், வாகைக் குளத்தில் இரு பெண்கள் உள்பட ஐவர் போலீஸ் துப்பாக்கிக்கு இரை, உடுமலையில் போலீஸ் கட்டடத்தில் இருவர் மரணம், பனைவடலி சத்திரத்தில் போலீஸ் அதிகாரி உயிர் பலி, பத்திரிகைகள் பத்திபத்தியாக எழுதுமளவுக்கு வெள்ளியூரில் போலீஸாரின் அத்து மீறல்கள் என்ற அளவுக்கு நிலைமை வளர அரசு அனுமதித்திருக்க வேண்டுமா? சட்டசபையில் எதிர்க்கட்சியினர் எடுத்துக் காட்டியதுபோல், நாராயணசாமி ஒருவர்தான் விவசாயிகளின் நலனை விரும்புகிறவர், இந்த ஆட்சி விவசாயிகளுக்கு எதிரானது என்ற ஓர் எண்ணம் பரவலாக ஏற்பட அனுமதித்திருக்க வேண்டுமா?

வேறு பல மாநிலங்களில் ஏன் மத்தியிலே கூட இல்லாத பெரும்பான்மை பலத்துடன் கூடிய ஸ்திரமான ஆட்சி தமிழகத்தில் இருக்கிறது. ஆனால் ஸ்திரத் தன்மையும் ஊழலற்ற நல்லாட்சி என்ற நற்பெயரும் மட்டும் போதாது, பிரச்னைகளை எதிர்நோக்கிச் சமாளிக்கும் சாமர்த்தியமும் வேண்டும். அதைக் கடைப்பிடிப்பதை விடுத்து, பத்திரிகைகளுக்கு எந்தச் செய்தியை எப்படி வெளியிட வேண்டும் என்று உபதேசிப்பது வீரத்தைக் காட்டலாம், ராஜதந்திரம் ஆகாது.

# பூ... இவ்வளவு தானா?

— உஷா சுப்ரமணியன் —





செங்கல் நிற பத்மினி புல் தரையின் நடுவில் தவழ்ந்து, போர்டிகோவில் வழுக்கி நின்றது. டிரைவர் கதவைத் திறக்கவும், 'பைப்'பைக் கடித்தபடியே இறங்கினார் சுரேஷ். புல்வெளியில் பார்வை பதிந்ததும், அவர் முகத்தில் திருப்தி ரேகையாகப் படர்ந்தது.

ரோஜா வண்ணத்தில் கோடைக்கேற்ற மெல்லிய ஆர்கண்டி புடவை. அதில் ஆங்காங்கு கொத்தாக மலர்ந்த பூக்கள். கையால் முழுவதும் பூவேலை செய்ய மட்டும் இருநூறு ரூபாயை விழுங்கிவிட்டு மிகச் 'சிம்பிளாக'க் காட்சி அளித்தது கஞ்சி முட மொடப்பில். அதே நிறத்தில் கையில்லாத ரவிக்கை. காதிலும், கழுத்திலும் மட்டுமே ஒற்றை முத்துக்கள். குதி உயர்ந்த செருப்பு. முப்பத்தெட்டு வயதிலும் 'சிக்' என்று பிடித்து வைத்தாற்போல் நின்ற ராஜி, வேலைக்காரர்களுக்குக் கடைசி நேரக் கட்டளைகள் இட்டுக் கொண்டிருந்தாள்... கியலி ப்யூட்டிபுல் வுமன்...

''ஹாய் ராஜி.. எல்லாம் ரெடியா?''

''யெஸ் டார்லிங், நீங்க ஒரு வாஷ் எடுத்துக்கிட்டு ரெடி ஆயிடுங்க. ஏதாவது சாப்பிடறீங்களா?''

''ஒரு கப் சூடாகக் காப்பி மட்டும் கொடு...'' கணவரைப் பின் தொடர்ந்து வந்தாள் ராஜி. ''ராஜி யூ லுக் கியலி ஸ்வீட்...'' இடையில் விளையாடிய கணவனின் கையைச் செல்லமாகத் தட்டி விட்டபடியே அவள் முறுவலித்தாள்.

இந்த அழகைக் காப்பது என்ன அவ்வளவு சுலபமான காரியமா? வாயைக் கட்டி, நாக்கைக் கட்டி, மனத்தையும் கட்டி... காலையில் எழுந்தவுடன் வெது வெதுப்பான எலுமிச்சைச் சாறு மட்டும்... அதன் பிறகு 'பீச்சில்' பொழுது புலருமுன் காரை நிறுத்தி விட்டு ஆல் இந்தியா ரேடியோவிலிருந்து அண்ணா சதுக்கம் வரை வியர்க்க, விறுவிறுக்க நடை. வீடு திரும்பி நெய், வெண்ணெய் போடாத ஒரே ஸ்லைஸ் ரொட்டியை, பாலில்லாத சர்க்கரை சேர்க்காத காபியுடன் விழுங்கி விட்டு யோகா வகுப்புகளுக்குச் செல்ல வேண்டும். மதியத்தில் க்ரீம் தடவிய முகத்துடன் ஏர்கண்டிஷன் அறையில் ஒரு மணி அழகுத் தூக்கம். மாதம் இரு முறை ப்யூட்டி பார்லரில் ப்ளீசிங், முக டோனிங். இரவு ஒரு வேளை மட்டும் ஒரு கோப்பைச் சாதம். வேக வைத்த உப்பு, மிளகுப்பொடி தூவிய கறிகாய்களுடன் ஒரு டம்ளர் வெண்ணெய் எடுத்த மோர். இவ்வளவு கஷ்டப்பட்டால் அழகாக இருப்பதில் ஆச்சரியமென்ன? இன்று போல் எப்போதாவது 'பார்ட்டி' டின்னர் என்றால் மட்டும்தான் சாதாரணச் சாப்பாடு.

''எல்லாரும் எத்தினி மணிக்கு வராங்க?''

''ஆறு மணிக்கு... ட்ரிங்க்ஸ் இல்லாம டின்னர் 'போர்' அடிக்கும். அதனால் ஒன்பது மணிக்குள் முடிந்துவிடும்.''

''ட்ரிங்க்ஸ் கிடையாதா?''

''என்னங்க இது. இப்ப நம்ப ஊர்ல என்ன ராஜ்யம் நடக்குதுன்னு கூட மறந்துட்டீங்களா? உங்ககிட்டே பர்மிட் இருக்குது. வர்றவங்க எல்லார் கிட்டேயும் இருக்கும்னு என்ன நிச்சயம்? மாட்டிகிட்டாத் தெரியும்.''

''ஆமா, ஆமா. அப்பு நான் இப்பவே ஒரு பெக் அடிச்சிட்டு வந்திடறேன்!'' காப்பியை வைத்துவிட்டு ப்ரிஜ்ஜை நோக்கி நடந்தார்.

''வான்ட் டு ஜாயின் மீ?'' ஜின்னையும், மினரல் வாட்டரையும் அளவாகக் கலந்து விட்டு மனைவியை நோக்கி நீட்டினார்.

''போங்க. இப்ப வேற வேலையில்ல. நீங்களே



ஒரே மிடாவாக் குடிச்சிட்டுத் தயாராகுங்க. எனக்கு வேலே கிடக்குது.''

''ராஜி,ப்ரியாஎங்கே?''

''அவ இன்னும் காலேஜ்லேந்து வரல்லேங்க... வந்தாலும் என்ன. அதுக்கு பார்ட்டியின்னாலே 'அலர்ஜி'. ரூமுக்குள்ளே கதவை அடைச்சிக்கிட்டுக் கிடக்கும். காலேலேயே கார் அனுப்பாதீங்கம்மா. நான் மெதுவா பஸ்ஸிலேயே வரேன்னு சொல்லிடுச்சு. எங்கேயாவது ப்ரெண்ட்ஸ் வீட்டுக்குப் போயிட்டு வரும்.'

''பெரியவங்க மத்தியிலே அது என்ன செய்யும்? பொழுது போகாதுதான்: ஆமா, சோஷியல் வெல்ஃபேர் போர்ட் சேர்மன் வராங்களா?''

''மத்யான ப்ளேட்டில் தான் புல்லிலேந்து திரும்பிறாங்க. ஆனாலும் கட்டாயம் வர்றதா சொன்னாங்க...''

''எம்பஸிக்காரங்க...?''

''அவங்க இல்லாமலா?... ஏதோ கார் சத்தம் கேக்குது... நீங்க மாடிக்குப் போய் உடை மாத்திட்டு வாங்க...'' ராஜி சிட்டென வாசலை நோக்கிப் பறந்தாள்.

முதல் வருகை – மிஸ்டர் அண்ட் மிஸஸ் ஸின்ஹா. பெரிய வியாபாரப் புள்ளி...

''ஓ... மிஸஸ் சுரேஷ்... யூ லுக் ரியலி கார்ஜியஸ்'' ஸின்ஹா ராஜியின் இருகைகளையும் சேர்த்துக் குலுக்கினார். ''ரஷ்யாவில் எல்லாரும் அப்படியே மயங்கிடப் போறாங்க...: ராஜ்கபூர், நர்கிஸுக்குப் பிறகு மிஸஸ் சுரேஷ்தான் மிகப் பிரபலமான இந்தியர் என்று பேர் எடுக்கப் போறீங்க... என்னிக்குப் பயணம்?''

வெளிப்பூச்சான உபய குசலோபரிகளுடன் வரவேற்பறையுள் நுழைந்தார்கள். சுரேஷ் உடைமாற்றி வரவும் ஸின்ஹாவும் சுரேஷும் வியாபாரப் பேச்சுத் தொடங்கினார்கள்.

''நோ ஷாப் ஹியர்'' ராஜி உதட்டில் விரலை வைத்துக் குவித்தாள்.. ''ஓ...கே... ஸாரி''

வின்றூ விளையாட்டாக மன்னிப்புக் கேட்டார்.

ஒவ்வொருவராக விருந்தினர்கள் வரத் தொடங்கினர்கள். அறையில் விதவிதமான ப்ரெஞ்சு நறுமணமும், பைப் புகையும் கலந்தது. அலை அலையாகச் சிரிப்பு.... வாயில் துவங்கி, கழுத்தைத் தாண்டிக் கூடக் கீழிறங்காத மேல் மட்டச் சிரிப்பு. விருந்தினர் அனைவரும் வந்த பிறகு புல்தரையில் அமைத்திருந்த நாற்காலிகளில் சின்னக் கூட்டங்களாகப் பிரிந்தனர். அறையிலிருந்த ரிக்கார்ட் பிளேயரிலிருந்து எழும்பிய ஆனந்த சங்கரின் இசை தரமான ஸ்பீக்கர்களின் உதவியால் புல் தரையில் பாய்ச்சப்பட்டது.

'மிதாய் ஷாப்பி'லிருந்து வந்த ரஸமலாய், 'தாஜ் ஸ்பெஷல்' ஸாண்ட்விச்சுகள், 'ராமகிருஷ்ணாவின்' சூடான ஸமூசா பக்கோடா, சிப்ஸ் ரகங்கள். சூடு வேண்டியவர்க்குக் காப்பி டீ. குளிர் விரும்பிகளுக்குப் பானங்கள், ஐஸ்கிரீம்கள்... கையில் ஏந்திய தட்டுகளுடன் விருந்தினர்களிடையே புகுந்து புறப்பட்டுக் கொண்டிருந்தாள் ராஜி. இடையில் கைப்போட்டக் கணவரின் 'பாஸு'க்கு' முறுவல். பொறுமையுடன் நோக்கிய இளம் நரை மாது மனம் மகிழப் பாராட்டுக்கள். சுரேஷ் ஒவ்வொரு முறையும் ராஜியைப் பார்த்துத்தான் வியக்கிறார்... இவ்வளவு சாதுரியம் அவளுக்கு எப்படி வந்தது? இந்தச் சாமர்த்தியத்தின் காரணத்தால் தானே குழந்தைகள் ஆண்டை ஒட்டி அரசு தேர்ந்தெடுத்துள்ள ஸ்டடி டூரில் அவள் செல்ல முடிகிறது... அவர் அவளுக்குச் செல்வத்தைத் தந்திருக்கலாம். ஆனால் அதை இயற்கையாக அமைந்த அழகுடன் சேர்த்துத் திறமையாக உபயோகிக்கத் தெரிந்திருக்கிறதே...

ராஜி, இந்த ரஷ்ய விஜயத்தின் போது தான் சாதிக்க எண்ணியுள்ளவைகளை விவரித்துக் கொண்டிருக்கிறாள்.

பேச்சில் நேரம் போவதே தெரியவில்லை. ராஜி சமூக நலத்துறை அதிகாரி விவரித்துக் கொண்டிருந்த ரஷ்யக் குழந்தைப் பாதுகாப்பகங்களைப் பற்றிய விவரங்களை 'சீரியஸ்'ஸான முகத்துடன் கேட்டுக் கொண்டிருந்தாள். கணவன் அழைக்கும் சைகையைப் புரிந்து கொண்டு எழுந்து வந்தாள்.

"ராஜி, ப்ரியா இன்னும் வரலியே?"



இருவர் மனத்திலுமே கலக்கம்தான். ராஜிதான் செயல்பட்டாள். "டிரைவர், பாப்பா இன்னும் 'காலேஜ்'லேந்து வரலே. மாலினி வீட்டிலேயும், மேரி வீட்டிலேயும் போய்ப் பாத்துட்டு, இருந்தாக் கூட்டியாந்துடு."

மணி ஒன்பதரை... விருந்தினர்கள் ஒவ்வொருவராக விடைபெறத் துவங்கி விட்டனர். புன்முறுவல், கைகுலுக்கல், வாழ்த்துக்கள். புல்வெளி வெறுமையாகக் காட்சி அளித்தது.

வரவேற்பு அறையில் சுரேஷும், ராஜியும் பிரமை பிடித்தாற் போல் நின்றனர். "மாலினி சொல்லிச்சாம், ப்ரியா அஞ்சுக்கே காலேஜ்லேருந்து கௌம்பிடுத்துன்னு..."

"ம்... ம்... நா வேணா போய்த் தேடட்டா?"

"எங்கேன்னு போவீங்க...?" இருவர் மனத்திலும் சோப்ரா குழந்தைகள் கதி நினைவலையாகத் தோன்றி வயிற்றைக் கலக்கியது.

"கொஞ்ச நேரம் பார்க்கலாம்..." ராஜி சோபாவில் அமர்ந்தாள்.

பத்தடிக்கப் பத்து நிமிஷம்... கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே வருவது ப்ரியாவேதான்... ராஜி கண் குத்திட மகளைப் பார்த்தாள்... பரட்டையாகக் கலைந்த தலை, முகம் முழுதும் புழுதி, ஜீன்ஸ், ஷர்ட் எல்லாம் மண், சேறு, ரத்தக்கறை... அடிப்பாவி... போன வாரம் டி. வி.யில் பார்த்த 'சில நேரங்களில் சில மனிதர்கள்' மாதிரி... ஐயோ, என் பெண்ணுக்கா?

"ப்ரியா என்னம்மா..." படபடப்புடன் ஓடிய கணவனைத் தடுத்தாள்... "நீங்க இருங்க... ப்ரியா உள்ளே வாம்மா..." மகள் தோளில் கை போட்டவுடனேயே, அவள் விசும்ப ஆரம்பித்தாள். "கண்ணு, கவலைப்படாதே... மம்மி இருக்கேன் பாரு ராஜா, உள்ளே வா." தனி அறைக்கு அழைத்துச் சென்று கதவைத் தாளிட்டாள். ப்ரியா தாயின் மடியில் சாய்ந்து விட்டாள். பொங்கிப் பொங்கி அழுதாள்...

"ப்ரியா, அழுறதை நிறுத்தும்மா... எங்கிட்ட விஷயத்தைச் சொல்லும்மா."

அழுகை அடங்கவில்லை. "ப்ரியா வெளியிலே ஒருத்தருக்கும் தெரியாம நா செஞ்சுடறேன்."

"அம்மா, இப்ப நீங்க நினைக்கிறபடி ஒண்ணும் நடந்துடலே. ஐ ஆம் ஸ்டில் எ வர்ஜின் ஒன்லி." பேச்சு குரோதமாக வந்தது.

"பின்னே என்னதான் ஆச்சு, இப்படி அழறபடி. உடம்பெல்லாம் சேறு, ரத்தம்?"

ப்ரியா மறுபடியும் விசும்ப ஆரம்பித்தாள். விசும்பலினூடே பேச்சுத் தயங்கித் தயங்கி, நடந்த சம்பவத்தின் அவலத்தைக் கண்ணீரால் கரைக்கும் பாவமாக... "காலேஜ்லேருந்து அஞ்சு மணிக்கே கிளம்பினேன், கொஞ்ச தூரம் நடந்து வந்து பஸ்ஸைப் பிடிக்கலாம்னு. மாலினி, காமினி எல்லாம் திரும்பிட்டாங்க. அப்பத்தாம்மா... அஞ்சு வயசிருக்கும்... தலையெல்லாம் சடை, உடம்பெல்லாம் புழுதி, சொரங்கு, வயிறு மட்டும் பெரிசா உடம்பிலே துணிக்கந்தை கூட இல்

லாம்...'' ப்ரியா மறுபடியும் அழ ஆரம்பித்தாள். ''அதன் இடுப்பில ஆறேழு மாசமிருக்கும் இன்னொரு குழந்தை. பெரிய குழந்தை காலில இத்தனூம் பெரிய ஆணி. அதுவும் துருப்பிடிச்ச ஆணி குத்தி ரத்தமிரைக் கொட்டுது. ஆணியைப் பிடுங்கக்கூட முடியாம அவ்வளவு ஆழம்...'' மறுபடியும் விசும்பல். ''பக்கத்திலே இருந்த கடைக்காரர் கதறக் கதற ஆணியைப் பிடுங்கிப் போட்டுட்டார். வலியால் ரத்தம் ஒழுகற காலோட துடிக்கறதும்மா அந்தக் குழந்தை. இடுப்பிலே இருக்கிற சுமை ஒருபக்கம் கீழே இறங்க மாட்டேன்னு சண்டி செஞ்சு அழுவுது... துருப்பிடிச்ச ஆணிம்மா... வெறுங்காலோட நடந்தாக் கட்டாயம் 'டிடேனஸ்' வந்து 'ஜன்னி' கண்டுடும்.''

''ஓ... ப்ரியா, ஏன் நேரங்கழிச்சு வரேன்னு கேட்டா, சம்பந்தமில்லாம உளறிக்கிட்டு...'' ராஜீ வெடித்தாள்.

''ரஷ்யக் குழந்தைகளைப் பற்றி 'ஸ்டடி' பண்ணப்போறியேம்மா, நம்ம குழந்தை ஒண்ணைப் பத்திக் கேட்கப் பொறுமையில்லையா? பட்டுக் கதறுகிற குழந்தையை எப்படியம்மா தனியே விட்டுட்டு வர்றது... பக்கத்திலிருந்த கடைக்காரரைக் கேட்டேன். ... 'உனக்கேம்மா வம்பு? பெத்தவ, சின்னது பொறந்த பத்தாம் நாளே ரோட்டோரமா வுட்டுட்டு வண்டிக்கார முனியனோட ஓடிப் போயிட்டா. அப்பன் காலேலே 'ஜோட் ரிப்பேர்னு' கத்திக்கிட்டுப் போனான்னு பொழுது சாயறச்சே தான் ஆப்பமோ, இட்டிலியோ வாங்கிக்கிட்டு வருவான். அப்பப்போ ரெண்டு, மூணு நாளு வரல்லேன்னா, இந்தக் கல்யாண மண்டபத்திலே எச்சில் பொறுக்கி ரெண்டும் சாப்பிட்டுக்கும். நாங்க இரக்கப்பட்டு அஞ்சு பைசா, பத்து பைசா தருவம்' அப்படின்னான்.''

''ஹைலி இர்ரெஸ்பான்ஸிபிள்...''

''யாரு அவங்க அப்பனா... அவன் தெருவோரம் கத்திண்டு போலேன்னா, இந்த ஒரு வேளை சாப்பாடு கூடக் கிடைக்காதே... செருப்புத் தைக்கிறவன் குழந்தைகளைப் பார்த்துக்க ஆயாவா போட முடியும்?''

''ஓ... கே. பிரியா... போதும் சாப்பிட வா...''

''முழுக்கதையும் கேளு... ரத்தம் கொட்டற குழந்தையை இடுப்பில தூக்கி வச்சுக்கிட்டேன். அந்தக் குழந்தையோட இடுப்பிலே இன்னொரு குழந்தை... டாக்டர் வீட்டுக்கு அரைமைல் நடை... என்கிட்டே இருந்த பத்து ரூபாயில அஞ்சு ரூபாயைக் கொடுத்தேன். டிடேனஸ் ஊசி போட்டார். பாண்டேஜ் கட்டினார். ''

''இத்தனை செஞ்சவளுக்கு, வீட்டுக்கு ஒரு 'கால்' போட முடியல்லியா?''

''ஓ... போன் இல்லாத டாக்டர் வீட்டை உன்னால் நினைத்துக்கூடப் பார்க்க முடியாதில்லையா? இந்த டாக்டர் ஒரு ரூபாய்க்கும், ரெண்டு ரூபாய்க்கும் ஏழைகளுக்கு வைத்தியம் செய்யறவர்... டிஸ்பென்சரியே குடிசைதான். கட்டுப்போட்ட குழந்தையை மறுபடியும் தூக்கிக்கிட்டு வந்து கடையாண்ட விட்டேன். கடைக்காரன்கிட்ட என்னிடம் பாக்கியிருந்த அஞ்சு ரூபாயையும் தந்து ஏதாவது சாப்பிட வாங்கித்தரச் சொன்னேன். நாளைக்கு டாக்டர் கிட்ட பாண்டேஜ் மாத்த அழைச்சிட்டுப் போகச் சொன்னேன். கையில் பணமில்லே. அதனால் மெதுவா நடந்தே வீட்டுக்கு வந்தேன்.''

''அஞ்சு மைல் நடந்து வந்தியா?''

''காயம் பட்ட காலோட, ஒரு குழந்தையையும் சுமந்துக்கிட்டு அந்தக் குழந்தை தெருத் தெருவா எச்சில் இலைக்கு நடக்குது!''

''சரி, சரி... இப்ப அதெல்லாம் பேசி என் 'மூடைக்' கெடுக்காதே... ஏதோ பணத்தைக் கொடுத்திட்டு வராம, செரங்கு வந்த குழந்தையைத் தூக்கிக்கிட்டு நடந்தாளாம்... ஸ்டுப்பிட்...''

அழுகை ஓய்ந்திருந்த ப்ரியாவின் அடிவயிற்றிலிருந்து ஒரு கேவல் எழுந்தது. 'உனக்குப் புரியாதும்மா புரியாது... 'பார் ஹூம் தி பெல் டோல்ஸ்' என்று யாருடைய சாவுமணி என்று காதைத் தீட்டிக் கொண்டு உன்னைப் போல் என்னால் கேட்க முடியாது. ஜான் டன்னே சொன்ன மாதிரி, மனிதாபிமானத்தோட சாவு மணியைத்தானே என்னால் கேட்க முடியுது... தெருக் குழந்தை உடம்பிலிருந்த ஒவ்வொரு செரங்கும் என்னை ஆணியாக் குத்தறபோது, காசை மாத்திரம் தூக்கி எறிஞ்சிட்டுவர மனசாகலேயேம்மா... நீங்க ''பூ... இவ்வளவுதானான்னு'' திருப்திப் பட்டீங்க... ரஷ்யாவுக்குச் சென்று திரும்பி 'யாஸ்வி' யிலே எப்படிக் குழந்தைகளைப் பாதுகாக்கறாங்கன்னு மேடையேறிப் பேசுவீங்க. ஆதரவற்ற குழந்தைகளுக்கு அங்கே எல்லாமே இலவசம், அவங்களுக்கு ரஷ்யாவிலே கவனிப்பே தனின்னு பூரிக்கப்போறீங்க. நியாயமான பூரிப்புத்தான்... ஆனா நமக்குன்னு வரும்போது... பாவம்மா அந்தக் குழந்தை...'' ப்ரியா மறுபடியும் விசும்ப ஆரம்பித்தாள்.

ராஜீ அலுப்புடன் வெளியேறினாள்.



''நம்மோட வேலையில எவ்வளவு பெரிய குறை இருந்தாலும் எப்படியோ சமாளிக்கிற ஆளு டைலர்தான்.''

''எப்படிச் சமாளிப்பான்?''

''புது ஃபாஷன்னு சொல்லித்தான்!''

—வ. தேனப்பன்

# கனவா-நிஜமா? 20

கதை: வாண்டுமாமா
சித்திரம்: செல்லம்















# வட்டமேஜை



## கமல் சொன்னது கரெக்ட்!

● தமிழ்ப் பட ரசிகர்களின் தரம்பற்றிக் கமல் கூறியது நூற்றுக்கு நூறு உண்மை! அவர் கூறியிருப்பதை மொத்தமாக மறுத்துக் கொண்டிருக்கிறாரே தவிர கருத்துக்குக் கருத்து மறுப்பாக டைரக்டர் சீனிவாசனால் தர முடிந்ததா?

குடிசையைத் தூக்கி நிறுத்துகிறாரே சீனிவாசன், அதில் என்ன இருக்கிறது? சத்யஜித் ரே, சமீப காலமாகக் கன்னடத்திலும் மலையாளத்திலும் பரிசு பெற்ற படங்களின் டைரக்டர்கள் காட்டிய வழிகளை அவசரமாகவும் அர்த்தமில்லாமலும் புரிந்து கொண்டு விட்ட ஒரு கத்துக் குட்டியின் 'அவியல்' படைப்புத்தான் குடிசை!

அறிவு ஜீவிகளை விடுங்கள். அறிவு, உணர்வு என்றெல்லாம் அலட்டிக் கொள்ளாமல் நல்ல படங்களை ரசிப்பதில் ஒரு தரத்தை உருவாக்கிக் கொண்டிருக்கிற ஒரு கூட்டமும் தமிழ்நாட்டில் வளர்ந்து கொண்டுதான் வருகிறது. புதிய வார்ப்புகள் புதிய வாய்ப்பு! அதிலும் கூட நம்ப முடியாதவையும் மிகைப் படுத்தப் பட்டவையும் உள்ளன என்பது மறுக்க முடியாத ஒன்று.

கோடம்பாக்கத்துக்கும் கலையம்சத்துக்கும் ரொம்ப தூரம்! 'காசு' தவிரத் தமிழ்ப்படத் துறையினர்க்கு வேறு எது குறியாக இருந்தது? இருக்கிறது? ஒரு வரைமுறையும் இல்லாமல், ஒரு திட்டமும் இல்லாமல் ஒரு சண்டைக் காட்சி, ஒரு டூயட் எடுத்துவிட்டுப் பிறகுதான் கதை பற்றிய நினைவுக்கே வருகிற கூட்டம் இருக்கிற வரை 'தமிழ்ப் படத்துக்குப் பரிசு' என்ற வார்த்தைகளை உச்சரிக்கக்கூட இவர்களுக்கு என்ன தகுதி இருக்கிறது?

சென்னை—45 புலவர் வள்ளியப்பன்.

● அமாவாசை! கல்கியில் புதிய வார்ப்புகள்' விமர்சனம் எப்படி, நல்லா இருக்குது இல்லே?''

''உள்ளத சொல்றீங்க!''

''அமாவாசை, இது பாரதிராஜாவோட, நாலாவது வெள்ளிவிழாப் படம்னு முடிவு செய்யலாமில்லே?''

''ஐயா, உள்ளத சொல்றீங்க!''

சென்னை—40 சங்கர்

● *At times silence is eloquent* என்பார்கள். புதிய வார்ப்புகள் பட விமர்சனம் அந்த வகையில் உயர்வாய் அமைந்துவிட்டது. பாராட்டுக்குரியவர்களின் படங்களுடன் கல்கியின் வாழ்த்துக்கள் என்றால்... *Fine!*

திருச்சி—18 என். பாலு

● ''யார் கண்டது? இளைஞர்களுக்கு 'நினைத்தாலே இனிக்கும்' கசக்காத படமாக இருக்கலாம்'', என்று பி. எஸ். எம். பாராட்டி எரிகின்ற நெருப்பிலே எண்ணெய் வார்ப்பதைப் போல் எங்கள் வயிற்றெரிச்சலை மேலும் கிளப்புகிறார்.

சென்னை—17 ''மதுரை மணியன்''

● ''என்னுடைய பவனி'' செம்பியனின் கட்டுரையைப் படித்ததும் பஸ் பயணத்தில் குலுங்குவது போலவே குலுங்கிக் குலுங்கிச் சிரித்தேன்.

மயிலை ஸ்ரீதரன்

● பெரியார் பற்றிய தலையங்கம் கண்டேன். உண்மையிலேயே அதில் சொல்லப்பட்ட கருத்துக்கள் அனைத்தும் மூதறிஞர் ராஜாஜி காலத்திய ''கல்கி'' யின் தலையங்கத்தை நினைவூட்டின. தொடரட்டும் உங்கள் நடுநிலைமை.

மதுரை—1 பிரா முகைதீன்

● பரிசாக ரைலருடன் கூடிய டார்ச்லைட் அனுப்பியதற்கு நன்றி. மிகுந்த கவனத்துடன் பார்சல் செய்யப்பட்டிருந்தது. மிக நன்றாக இயங்குகிறது. நீண்ட காலத்துக்கு எனக்கு உபயோகமாக இருக்கும். கல்கி விநாயகர் படமே டார்ச்லைட்டில் பதிக்கப் பட்டிருந்ததைப் பார்த்து மிகவும் மகிழ்ச்சி அடைந்தேன்.

மேட்டுப்பாளையம் எஸ். பாலாம்பாள்

● நடுவில் சிறிது காலம் இங்கு கல்கி கிடைக்காமல் இருந்தது. இப்பொழுது தவறாமல் சனிக்கிழமையன்றே கிடைக்கிறது நன்றி. முன்பிருந்ததைவிட இப்பொழுது கல்கி நல்ல முறையில் வெளியாகிறது. திரை உலகம் சம்பந்தப்பட்டவை என்றாலே உப்புச் சப்பில்லாத விஷயத்துடன் இளம் நடிகைகளின் காணச் சகிக்காத போஸ்கள்தான் என்ற நிலை இருக்கும் இந்நாளில், திரை உலகம் சம்பந்தப் பட்டவைகளைக் கண்ணியமான முறையிலும் வெளியிட முடியும் என நிரூபித்திருக்கின்றீர்கள்.

துபாய் விஜயா ரங்கநாதன்.

● எழுபத்தைந்து பைசாவுக்கு நீங்கள் தரும் பக்கங்களின் எண்ணிக்கை குறைவு. பக்கங்களை அதிகப் படுத்துங்கள் அல்லது விலையைக் குறையுங்கள்.

சென்னை—61 கே. வி. சம்பத்

கல்கி பத்திரிகையின் நீள அகலங்கள் அதிகம் என்பதைப் பலர் மறந்துவிடுகின்றனர். பரப்பளவைக் கணக்கிட்டால் பெரும்பாலான வாரப் பத்திரிகைகளின் 80 பக்கங்களைவிடக் கல்கியின் 64 பக்கங்கள் அதிகம் என்பது புரியும். பத்திரிகைக் காகிதம் எடைக் கணக்கில்தான் வாங்கப்படுகிறது என்பதை நேயர்கள் மறக்கக் கூடாது. —ஆசிரியர்

# பாட்டிமார்களும் பேத்திமார்களும்

ஜெயகாந்தன்

## 7. அக்கரைப் பக்கம் வரமாட்டேன்!

"புள்ளே, புள்ளே... கோவிச்சுக்காதே! நான் நல்லது சொல்றேன்... உன் வயசுக்கு உனக்கு ஜோடியா இருக்கற ஒரு பொண்ணு நானு? நான் பெரியவ இல்லே?... வயசுப் பொண்ணுங்க எத்தினி பேரு உனக்காக ஏங்கிக்கினு கெடக்குதுங்க... எனக்குப் பயமாவே இருக்கு. எங்க ரஞ்சிதம் உன் மேலே உசிரை வெச்சிக்கினு இருக்கா. நீ அவளுக்குச் சங்கிலியும் சரப்பளியும் காசும் பணமும் அள்ளிக் குடுத்து அவளை வேற மயக்கிப் புட்டே?'' என்று வெள்ளையம்மாள் சொல்லுவதை இடைமறித்து.–

''சீ! வாயை மூடு!'' என்று தடுத்தான் சிங்காரம்:''பொன்னம்பலம் அவளுக்கு முறை மாப்பிள்ளையாச்சே. எனக்கு அவன் சிநேகிதக்காரன். அவனுக்கு உள்ள பொண்ணை நான் கெட்ட எண்ணத்தோட கண்ணெடுத்தும் பார்ப்பேனு?... நான் உனக்காகத் தாண்டி இந்த அக்கரைக்கே வரேன்...'' என்று சிங்காரம் சொன்ன நியாயத்தையும் 'இவன் தனக்காகவே இங்கு வருகிறான்' என்று அவன் வாயாலேயே சொன்னதையும் கேட்ட போது வெள்ளையம்மாளின் கண்களில் கண்ணீர் பொங்கியது.

''வேணும் புள்ளே! உங்க வீட்டு மனுஷங்களோட நான் தாயாப் பிள்ளையாப் பழகிட்டவ... இந்த நாத்த உடம்பு மேலே ஆசை வெச்சி நல்லவங்களைக் கெடுத்த பாவம் வேணும்!'' என்று ஒரு பக்கம் அவள் நாக்கு நியாயம் பேசினாலும், அவள் கண்களும் பார்வையும் கிறங்கிக் கிறங்கிச் சிங்காரத்துக்குப் 'போதை'யை ஏற்றின!

''புள்ளே!''–என்று திடீரெனக் குடி வெறியில் கூவிக் கொண்டு தள்ளாடியவாறு தன் எதிரில் வந்து நின்ற பொன்னம்பலத்தைப் பார்த்துத் திடுக்கிட்டு எழுந்து நின்றான் சிங்காரம்.

''புள்ளே...'' என்று சிங்காரத்தின் எதிரில் வந்து நின்ற பிறகு, இன்னொரு தடவை கூவிப் பற்களை நறநறவெனக் கடித்துக் கோபமாய் அவன் விழிப்பதைப் பார்த்ததும் வெள்ளையம்மாள் சீறி எழுந்தாள்...

''அட சீ அப்பாலே போ! குடிவெறியிலே மனுஷான் தராதரம் தெரியலியா?...'' என்று வந்த வேகத்தில் பொன்னம்பலத்தை ஒரு தள்ளுத் தள்ளிவிட்டாள் வெள்ளையம்மாள். அவன் தடுமாறிச் சாய்ந்து தென்னை மரத்தைப் பிடித்துக் கொண்டு 'ஓ'வென்று அழுதான். நிலைகுலைந்து நிற்பது பொன்னம்பலம் மட்டுமா? அந்த மூன்று பேருமே ஆளுக்கொரு தள்ளாட்டத்தில் தடுமாறித்தான் நின்றிருந்தனர்.

சந்தேகமும் வெறுப்பும் கலந்து ஆத்திர வெறியில் சிவந்து கலங்கி விழிக்கும் பொன்னம்பலத்தின் கண்களைப் பார்த்தான் சிங்காரம். இந்தக் கோலத்தில் பொன்னம்பலத்தை அவன் கற்பனை செய்து கூடப் பார்த்ததில்லை. பொன்னம்பலம் குடிப்பான் என்று சிங்காரத்துக்குத் தெரியும். 'குடிக்கக் காசி' என்று சில சமயங்களில் தலையைச் சொறிந்து கொண்டு நின்று சிங்காரத்திடம் அவன் கேட்பது உண்டு. சிங்காரம் சிரித்துக் கொண்டே பணம் தருவதுமுண்டு. ஆனால் இதுவரை இவனைக் குடித்த கோலத்தில் சிங்காரம் பார்த்ததே இல்லை. பொதுவாகக் குடித்து விட்டு ஆடுகிறவர்களைப் பார்க்கும் போது அவர்களைப் புத்திகோளாறுடைய மனிதர்களாகவே நினைத்தான் சிங்காரம். தன் தோட்டத்தில் வேலை செய்கிற பண்ணையாட்களைக் கூட – அந்நிலையில் கண்டால் சிங்காரம் பயம் கொண்டு விலகி வந்து விடுவான். அவர்களிடம் பேச்சு வைத்துக் கொள்ள மாட்டான். அந்த நிலையில் மரியாதைக்குரிய எஜமானனுன தன்னை அடையாளம் தெரியாமல் அவர்கள் ஏதாவது பேசிவிட்டால் தனது அந்தஸ்து குலைந்து விடுமே என்கிற அச்சத்தால் அவன் அப்போது அங்கிருந்து போய் விடுவான். அதன் பிறகு அந்த வேலையாட்களை – அவர்கள் குடி மயக்கத்திலிருந்து விடுபட்டு வந்து நிற்கும் போது - கண்டிப்பான். ''ஏண்டா கள்ளுத் தண்ணியெ ஊத்திக்கிட்டா கண்ணுகூட வாடா அவிஞ்சி போயிடும்... இன்னொரு தடவை என் முன்னே ஆடிக்கிட்டு வந்தியானு மினாறு பிஞ்சி போகும்! ஜாக்கிரதை'' என்று பண்ணையாட்களை மிரட்டுவான். அதற்குப் பயந்து அவர்கள் குடித்த நிலையில் எப்போதாவது சிங்காரத்தின் வரு

அட்டைப்படங்கள்:

பழைய பாணி புதிய பாணியோ வந்தாலும் போகுமோ?

வண்ணப்படம் எடுத்தவர்: சரஸ்வதி சத்தியமூர்த்தி

முன் அட்டையில்: குமாரி கல்பனா

பின் அட்டையில்: குமாரி சுஜாதா சுந்தரம்

கையைத் தூரத்திலேயே கண்டு விட்டார்களானால் ஒதுங்கி மறைந்து கொள்வார்கள்.

''அதோ! சிறுக்குப் பிள்ளை வராரு'' என்று சொல்லியே சில குடிகாரர்களை அவனது தோட்டத்திலிருந்து அப்புறப்படுத்துவார்கள்...

தன் எதிரே குடித்து ஆட்டம் போட்டுக் கொண்டு வந்து நின்று ''பிள்ளே!'' என்று அதிகாரத்தோடு கூப்பிட்டு நிற்கும் பொன்னம்பலத்தை அருவருப்பும் அச்சமும் கொண்டு வெறித்துப் பார்த்தான் சிங்காரம். தன்னைப் பார்த்து எதற்காக இவ்வளவு கோபத்துடன் பொன்னம்பலம் பற்களைக் கடிக்கிறான் என்று சிங்காரத்துக்குப் புரியாவிடினும், இந்த நிலைமை அவனை மிகவும் அவமானப் படுத்தியது...

''புள்ளே... குந்து புள்ளே... அவன் கெடக்கறான் குடிகார நாயி!... தே மரியாதையாப் பூடு... இங்கே நின்னு ஏதாவது ஏடாகூடமா



நடந்துக்கினு — நான் பொல்லாதவளாயிருப்பேன்!'' என்று சிங்காரத்துக்குச் சமாதானம் சொல்லிப் பொன்னம்பலத்தையும் எச்சரித்து விரட்டினாள் வெள்ளையம்மாள்.

அங்கிருந்து போவதற்கு முன்னால் பொன்னம்பலம், சிங்காரத்தை நோக்கி விரலை நீட்டிக் கொண்டு குமறிக் குமறி அழுதவாறே கேட்டான்:

''ரஞ்சிதம் எனக்கு மொறைப் பொண்ணு, பிள்ளே! ...ஆத்தாக்காரியெக் கையிலே போட்டுக்கினு காசு பணத்திலே நீ பெரிய ஆளு-அவளைத் தட்டிக்கலாம்னு பாக்றியா, புள்ளே?... அவ கழுத்திலே நீ எப்பிடி ஐயா, சங்கிலி போடலாம்... அவளும் அத்தெ மாட்டிக்கினு மினுக்கறு... எல்லாத்துக்கும் நீதான்டி காரணம்!'' என்று வெள்ளையம்மாளிடம் பாய்ந்தான் பொன்னம்பலம்.

இப்போதுதான் வெள்ளையம்மாளுக்கும் சிங்காரத்துக்கும் இவனது ஆவேசத்துக்கு என்ன காரணம் என்று விளங்கியது. வெள்ளையம்மாள் பெருங்குரலிட்டுச் சிரித்தாள்: ''அட இறுக்குப் பய மவனே! கெணத்துத்தண்ணியெ வெள்ளமா கொண்டு பூடும்!.. ஐயே! உன்னோட ரஞ்சிதம் — பொல்லாத மொறைப் பொண்ணு பஷுடச்சிட்டே!... தட்டிக்கலாம்னு பாக்கறுங்களாம்! தூ! நெனைப்பைப் பாருடா, நெனைப்பை!'' என்று அவனைக் கேலி செய்து இடித்துக் காட்டிச் சிரித்தாள்.

பொன்னம்பலம் இவளது கேலியையோ பேச்சையோ புரிந்து கொள்ளும் நிலையில் இல்லை. அவன் போக்கிலேயே உளறி அழுது கொண்டு, மணலில் பாதங்கள் அழுந்தப் பின்னத் தடுமாறியவாறு தோணித்துறையை நோக்கிப் போனான்.

சிங்காரம் மார்பின் மீது கட்டிய கைகளுடன் நின்று பொன்னம்பலம் போவதைப் பார்த்தான். 'நீ செய்யும் காரியம் சரியற்றது' என்று அவன் வந்து தன்னை எச்சரித்து விட்டுப் போவதுபோல் பொன்னம்பலத்தின் ஆவேசத்தில் சிங்காரம் உணர்ந்தான். ... இங்கே வந்து இந்தக் குப்பத்துச் செம்படவச்சியிடம் தான் உறவாடுவதும், அதனால் ஒரு குடிகாரப் பயல் — தன் நிழலில் கூட நிற்க யோக்யதை அற்ற நாய், குடித்துவிட்டு வந்து தன்னை விரல் நீட்டி எச்சரிக்கவும் ஆயிற்றே!' என்றெல்லாம் மனம் பொருமிக் கொண்டிருந்தான் சிங்காரம்.

''புள்ளே... புள்ளே! அது கெடக்குது அறிவு கெட்ட ஜென்மம்! அதெப் பத்தி யோசிச்சிக்கினு அப்பிடி நின்னுப்பிட்டே?... குடிவெறி அவனுக்கு...'' என்று சமாதானம் சொல்லுகிறபோது வெள்ளையம்மாளின் முகத்தைப்பார்த்தான் சிங்காரம். ''வெள்ளச்சி!..'' என்று பாம்பு போல் சீறிய குரலில் கூப்பிட்டவாறே அவள் கையை இறுகப் பிடித்தான்:

''நான் இனிமே இங்கே வரமாட்டேன்... 'அற்ப சகவாசத்தினாலே அவமானம் தான் வரும்... நான் வராட்டாலும் நீ வரியா, தோப்புக்கு?...'' என்று படபடப்போடு கேட்டான்.

'சிங்காரம் பிள்ளை கோபித்துக் கொண்டு விட்டார்' என்று புரிந்தது வெள்ளையம்மா

ளுக்கு: அவன் அவ்வாறு கோபித்துக் கொண்டு இனி இங்கே வரவே மாட்டேன் என்று சொல்லுவதைக் கேட்க அவளுக்கு மனத்துள் நிறைவாகவும் மகிழ்ச்சியாகவும் தானிருந்தது. ஆனால் அவன் வராமல் இருக்கப் போகும் நாட்களுக்காக, தான் வருத்தப்படுகிறவள் தான் என்று காட்டிக் கொள்ளும் வகையில் கண்கள் கலங்க அவள் சிங்காரத்தின் முகத்தைஏக்கத்தோடு பார்த்த வாறு கேட்டாள்: ''புள்ளே! எம்மேலே கோவிச்சுக்காதே... இது அப்பப்பசங்க கூட்டம்தான். நீ கவுடு சூது தெரியாத குழந்தையா இருந்தப்போ, நான்தான் உன்னை இங்கே கூட்டியாந்து இந்த அப்ப சனங்களோட பழக வெச்சேன்... அப்ப மாதிரியே எப்பவும் மூடியுமா, புள்ளே? நீ இங்கே வர்ரது இனிமே நல்லா தானிருக்காது.. ஒரு கொரலு கூப்பிட்டமன்னு அக்கரைச் சனங்க அத்தினியும் வந்து நிக்குமே — உன் தோப்பிலே! நீ இங்கே வராம இருந்தாலும் — இந்த வெள்ளச்சி அங்கே வந்து புள்ளையைக் கண்டுக்கலாமில்லே! புள்ளெ மூஞ்சி குடுத்துப் பேசும் இல்லே? என்மேலே ஒண்ணும் கோவம் வெச்சிக்க மாட்டியே?'' என்று கெஞ்சினாள்.

''நான் சமுத்திரத்திலே குளிச்சி விளையாட றதுக்குத்தான் — அந்த ஆசையிலேதான் அக்கரைக்கு வர ஆரம்பிச்சேன்... ஆனா ஒவ் வொரு தடவையும், சமுத்திரத்திலே குளிச் சப்புறம் போற வழியிலேயே குளத்திலே குளிக்க வேண்டியிருக்கில்லே? சரி ச?,



இனிமேசமுத்திரம் அங்கே வந்தாத்தான்! உனக்குப் பிள்ளையைப் பாக்கறதுக்கு அவ்வளவு அக்கரையிருந்தா, நீ வாடி அங்கே – வெள்ளச்சி'' என்று அவன் கன்னத்தை அழுந்தக்கிள்ளி – தனக்கு அவன் மீது கோபமில்லை என்று காட்டி – வந்தது போலவே, அதிவேகமாய் ஒரு சாரைப் பாம்புபோல் அங்கிருந்து அகன்றான் சிங்காரம்.

ஒரு கையால் வேட்டி முனையையும், சிகரெட் டின்னையும் பிடித்துக் கொண்டு, இன்னொரு கரத்தை வீசி வீசி அவன் நடந்து கொண்டிருந்த கம்பீரக் காட்சியைக் கன்னத்தில் ஊன்றிய கையுடன் பார்த்துக் கொண்டிருந்தாள் வெள்ளையம்மாள்.

சிங்காரம் தோணித் துறையருகே வருவதைப் பார்த்து விட்டுத் தூரத்துக் கள்ளுக் கடையில் சூழ்ந்திருந்த அக்கரை நண்பர்களும் தோணிக்காரனும் ஓடி வந்தனர்.

''பொன்னம்பலம் நீ வராதே!... பிள்ளை கோபத்திலே ஏதாவது பண்ணிடுவாரு'' என்று அவர்களில் ஒருவன் பின்னாலின் அத்யந்த நண்பனை ஒதுக்கி விட்டு அந்த இடத்திற்குப் போட்டியாகி இடம் பிடிப்பதுபோல் முந்தினான்.

''பிள்ளே... பிள்ளே!...'' என்று தன் தவறுக்கு வருந்தி முறையிட்டு மன்னிப்புக் கேட்டுக் கொள்ளுவதற்காகப் பொன்னம்பலம் எல்லாருக்கும் பின்னால் ஓடி வந்தான்; காலிடறி மணலில் விழுந்தான்.

தோணியில் போய்க் கொண்டிருந்த சிங்காரம் அவனைப் பார்க்கவுமில்லை... அந்தக் குரலைக் கேட்கவுமில்லை. (தொடரும்)



# சிரிக்கத்தான் வேணுமா?

''என் கணவர் ஏதோ படம் பார்த்து விட்டு வந்தாலும் வந்தார் என்னை இப்போதெல்லாம் 'பிரியா பிரியா' என்றுதான் கூப்பிடுகிறார்.''

''அது பரவாயில்லையே? என் கணவர் என்னிடம், 'அசடே உன்னை ஆராதிக்கிறேன்' என்று அடிக்கடி சொல்லுகிறார்.''

—ஜி. நடராஜன்



✱

''என்னடா தலையிலே வீக்கம்; கன்னத்திலே பிளாஸ்திரி?''

''பஸ் ஸ்டாப்பில் நம்ம டைப்பிஸ்ட் கவிதாவிடம் 'ஐ லவ் யூ' ன்னு ஒரு வார்த்தை சொன்னேன். அதே இடத்தில் செல்லமாத் தட்டி, ஆசையாக் கிள்ளி, அன்பாகத் தலையில் குட்டிவிட்டாள்.''

—தீபப்பிரியா



கண்ணன்: மரியாதை உள்ள பலகாரம் வேணுமா?

இல்லை, மரியாதை இல்லாத பலகாரம் வேணுமா?

முரளி: என்னடா இது புதுசாக் கேட்கறியே?

கண்ணன்: பஜ்ஜி, சொஜ்ஜி இவை மரியாதை உள்ள பலகாரம். போண்டா, பகோடா இவை மரியாதை இல்லாத பலகாரம்.

— லலிதா செல்லப்பா

✱

ஒருவன்: உங்க வீட்டிலே என்ன பலகாரம்?

மற்றவன்: மிளகாய், சுக்கு, இஞ்சி, மிளகு, மிளகு வத்தல்!

— பி. கே. வேங்கட்ராமன்

✱

ஒருவர்: ''எதுக்கு இவ்வளவு அவசரமா கடிதம் எழுதிட்டு இருக்கீங்க?''

மற்றவர்: ''பேனாவில் இங்க் தீர்ந்து விடும் போல இருக்கு: அதனால்தான் அவசரமா அவசரமா எழுதறேன்!''

— பொன். தண்டபாணி





# உடையவர் உயர்மொழி

(உடையவர், எம்பெருமானார், யதி ராஜர், பாஷ்யகாரர் என்றெல்லாம் போற்றப் பெறும் ஸ்ரீ ராமாநுஜாசாரியரின் அருள் வாக்குகளில் சில: இவற்றுள் முதல் இரண்டில், சென்ற இதழில் நாம் கேட்ட ஸ்ரீசங்கரரின் குரலே எதிரொலிப்பது கவனத்துக்குரியது.)

புலன்களின் தொடர்புக்கு அதீதமான பிரம மத்தை நேரடி நிரூபணங்களால் அறிய இய லாது. அதை சாஸ்திரப் பிரமாணத்தின் மூலமே அறிய முடியும் (ஸூத்ர பாஷ்யம்.)

ஜீவன் சுதந்திரம் பெற்றவனா, அல்லனா? அவன் சுதந்திரனே. அல்லாவிடில் சாஸ்திரங் களில் சொல்லியுள்ள விதி — விலக்குகள் அனைத் துமே அர்த்தமற்றதாகிவிடும். தம்முடைய எண்ணப்படி, இச்சைப்படி செயலாற்றவும் ஆற்றலிருக்கவும் கூடியவர்களுக்குத்தான் இப்படிப்பட்ட கட்டளைகள் இடப்படும். ... இவ்வாறு தன்னிச்சையாகவே பகவத் ப்ரீ தியை உத்தேசித்து நடக்கச் சங்கற்பிக்கிறவர் களுக்கு பகவான் விசேஷ அருள்கூர எண்ணி அவர்களுக்கு மேன்மேலும் நற்சீலங்களில் ஈடு பாடு தந்து, தன்னை அடையும் வழியில் செலுத்துகிறான். இறைவனுக்கு உகாதவற் றில் சுயேச்சையாகச் சங்கற்பித்தவருக்குத் தன்னை அடையும் வழியில் தடைகளை உண் டாக்குகிறான். (ஸூத்ர பாஷ்யம்.)

சிருஷ்டி அனைத்தும் உடல் எனில் பிரம்மமே அதனுள் உறையும் உயிர். இது சரீர — சரீரி பாவம். பரம்பொருள் ஒன்றே பொருள் எனில் அப்பொருளின் தனித்தனித் தன் மைகள் போன்றனவே சிருஷ்டியில் உள்ள பலவும். இது விசேஷண — விசேஷ்ய பாவம். தான் எதையும் சார்ந்திராத பிரம்மம் உடை மையாளன் எனில் அதைச் சார்ந்த உலகும் உயிர்களும் உடைமைகளாகும். இது சேஷ— சேஷீ பாவம். பரம்பொருள் முழுமை எனில் அதன் பகுதிகளே சிருஷ்டி. இது அம்ச — அம்சீ பாவம். தாங்கும் சக்தி பிரம்மம்; தாங்கப் படுவது சிருஷ்டி. இது ஆதார — ஆதேய பாவம். ஆளும் ஆற்றல் பிரம்மம்; ஆளப் படுவது சிருஷ்டி. இது நியந்தா — நியதா பாவம். காப்பது கடவுள்; காக்கப்படுவது படைப்பு. இது ரக்ஷக — ரக்ஷ்ய பாவம். (ராமா நுஜர் நூல்களில் விரவி வரும் கருத்துக்கள்.)

ஒரு கதம்ப வண்ண வஸ்திரம் வெள்ளை, சிவப்பு, கறுப்பு முதலிய பல நிறநூல்களை இழைத்து நெசவாகிறது. ஆயினும் அதில்எந்த ஓர் இடத்திலும் இந்த வர்ண நூல்தான் உள் ளது என்று தனித்துப் பிரித்து எடுக்க முடியும். பிரம்மமும் சைதன்யமுள்ள (ஆறறிவுள்ள) ஜீவன்களும் (அறிவற்ற) ஜட உலகமும் இப்படிப்பட்ட தனித்தனி நூல்களாயினும் ஒன்றாக இணைந்து உள்ளன. ஒரு வித்தியாஸம் யாதெனில் ஜீவ, ஜட நூல்கள் தனியாகப் பிரிந்தே உண்மையாயிருப்பனவாயினும், பிரம்ம நூலின் ஆதாரமின்றி இவை இருக்க முடியாது. (ஸூத்ர பாஷ்யம்.)

---

கல்லூரி மாணவன்: "ஏன்டா நீ Long Hair வைப்பதில்லே?"
நண்பன்: "ஐயையோ! எங்க அப்பா பின்னிடுவார் பின்னி!"

—சம்பத் குமாரி.



''நான் (பகவான்) அனைவருக்கும் ஸமமானவன். ஜாதி, ஸ்வபாவம், அறிவுநிலை என்பன ஒருவனை எனக்கு அதிகப் பிரியனாகவோ, பிரியமற்றவனாகவோ ஆக்குவதில்லை. ஜாதி முதலியவற்றின் உயர்வினாலேயே எவனொருவனும் என் அடைக்கலத்துக்கு விசேஷ உரிமை கோரவோ, என் தனிப் பிரீதியை அடையவோ முடியாது. என்னையே தன் புகலிடமாகக் கொள்வது என்ற ஒன்றைத் தவிர வேறொரு தகுதிகளாலும் என் அங்கீகாரத்தைப் பாத்தியதை கோர முடியாது.'' (கீதா பாஷ்யம்.)

''யோகி ஒருவனுக்கு நான் (பகவான்) எளிதே இன்புறக் கிட்டுவது எவ்வாறெனில்: என் அன்பர்களிடமிருந்து பிரிந்திருப்பதை என்னாலும் தாங்க இயலுவதில்லை. எனவே நான் அவர்களை வரிக்கிறேன். அப்படிப்பட்டவன் செய்யும் தியான உபாஸனைகளைப் பழுக்க வைக்கிறேன்; இவ்வழியில் அவனுக்குத் தடை செய்யக் கூடிய இடையூறுகளை நானே விலக்குகிறேன்; என்னிடம் அவனுக்குத் தீவிரமான பிரேமையையும் மன ஒட்டுதலையும் தோற்றுவிக்கிறேன்.'' (கீதா பாஷ்யம்.)

நெய்யானது பிசுக்கு நீங்காமல் ஒட்டிக் கொள்வது போல இதயம் இறைவனிடம் ஒட்டுவதே ஸ்நேஹம் (சிநேகம்.) இது கலப்பற்ற அன்பான பிரேமையாவதே பக்தி. ஸாதனா மார்க்கங்களில் பக்தியே எளிது என்றும், இது பிரபத்தி என்பதாக இறைவனிடமே பரிபூரண சரணாகதி செய்வதில் முடிய வேண்டும் என்றும் உடையவர் அநேக இடங்களில் உபதேசிக்கிறார்.

அகில புவனங்களின் தோற்றம் வளர்ச்சி அழிவு ஆகியவற்றை லீலையாகச் செய்பவனும்; அடக்கத்தோடு அண்டிய அனைத்துயிர்க்கும் காப்புத் தருவதையே நோன்பாகக் கொண்டவனும்; வேத முடியில் விளக்கமுறப் பொலிபவனும்; பரப் பிரம்மனும்; தன் மார்பில், திருமகளைக் கொண்டவனுமான ஸ்ரீநிவாஸனிடம் உத்தமமான அன்பாக (பக்தியாக) கனிந்த அறிவு (ஞானம்) எனக்கு ஏற்படுமாக! (ஸூத்ர பாஷ்ய மங்கள சுலோகம்.)

— தொகுப்பு: **ரா. கணபதி**

பெண்கள் மேலும் மேலும் உடைகள் வாங்குகிறார்கள்; குறையக் குறைய உடுத்துகிறார்கள்.
—கோட்ஸ்

உடை விஷயங்களில் நான் ஒருவருக்குச் சொல்லக்கூடியது இதுதான் : புது மாதிரியான உடைகள் அணிவதற்கு நீங்கள் முதல்வராக இருக்க வேண்டாம். அணியாதவர்களில் கடைசியாகவும் இருக்க வேண்டாம்.
—கௌப்பர்

உனது திருப்திக்காக உணவருந்து. ஆனால் பிறருடைய திருப்திக்காக உடை அணிந்துகொள்.
—ஃப்ராங்க்ளின்

கிரீடம் தரித்த சக்ரவர்த்திக்குரிய மரியாதையில் பாதிகூட வெறும் தொப்பி அணிந்த சக்ரவர்த்திக்குக் கிடைக்காது.
—கோல்டுஸ்மித்

தகவல்: **எஸ். ராஜகோபாலன்**





வழக்கத்திற்கு மாருக அன்று நோட்டீஸ் போர்டு அருகில் ஏக கூட்டம். ஸ்லீவ்லெஸ் ஜெயலலிதாவிற்கு ஸ்லீவ் அணிவித்து (பெயிண்டால்) அருகே, மாடஸ்டி பற்றி ஆங்கிலக் கவிதை ஒன்றும் எழுதப் பட்டிருந்தது. அன்றிலிருந்து குட்டையான ப்ளவுஸ் அணிய 144 தடை விதிக்கப் பட்டது. டே ஸ்டூடண்ட்ஸ் பாடு தேவலே. ஹாஸ்டல் ஸ்டூடண்ட்ஸ் பாடுதான் திண்டாட்டம். கூடுமானவரை சற்று நீண்ட கை, இடுப்புப் பகுதி அமைந்த ப்ளவுஸையே அணிந்தோம். எங்களிடையே ஒரு தோழி பிலோமினு என்று பெயர். 'லோகட்' குட்டையான சோளியையே அணிவாள். எப்படியோ ஸிஸ்டர்ஸ் கண்களில் படாமல் ஏமாற்றி வந்தாள். வகுப்பைக் கட் செய்து விட்டு ஹாஸ்டல் அறையை நோக்கி நடந்தவள், நேராக வந்த பிரின்ஸிபால் கண்களில் பட்டு விட்டாள். ஸிஸ்டர் பிரின்ஸிபால் அவளது அனைத்து ப்ளவுஸ்களையும் எடுத்து வரச் செய்து பார்சல் கட்டி எடுத்துச்சென்று விட்டார். மாலையே பார்ஸல் திரும்பி வந்தது. நாங்கள் தான் பார்ஸலைப் பிரித்தோம். அத்தனை ப்ளவுஸுக்கும் (எல்லாமே டார்க் கலர்) வெள்ளைத் துணியால் மூன்றங்குல அகலம் ஒட்டுப் போடப் பட்டிருந்தது. பிலோமினு முகம் போன போக்கைக் கண்டு எங்களால் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.

பி. பார்கவி.



# தையல் கலைஞர் ஜகரியா

சிறந்த தையல் கலைஞரும் கைலாஷ் தி. நகர் ஷோவின் மாஸ்டருமான திரு மொகமத் ஜகரியா ஃபேஷனைப் பற்றிக் கூற ஆரம்பித்தார்.

''ஆண்கள் பெல்பாட்டத்தை இன்னும் விட்டொழிக்கவில்லை. எல்லோரும் அதையே விரும்புகிறார்கள். பெண்கள் சமீபத்தில் அறிமுகமான 'கஃப்தான்' விரும்புகிறார்கள். அது தொள தொள கையுடன் கூடிய அங்கி. பம்பாய் போலன்றி சென்னையில் யாராவது ஒரு புதிய வகை ஆடையை அணிந்தால், அவர்களைக் கிண்டல் செய்வதில்தான் பலர் முனைகிறார்களே தவிர அந்தப் புதிய ஃபாஷனைப் பாராட்ட நாட்கள் பல செல்ல வேண்டி இருக்கிறது.

''எங்களிடம் வரும் வாடிக்கையாளரில் ஆண்களோ பெண்களோ பாதிப்பேர் அவர்களே ஃபாஷன் ஆல்பங்களைக் கொண்டு வந்து ஆர்டர் செய்கிறார்கள், பலருக்கு நான் என்னிடமுள்ள ஆல்பத்தைக் காண்பித்து ஆலோசனையும் சொல்கிறேன். கல்லூரி மாணவ மாணவிகள்தாம் ஃபேஷன் மேல் பற்றுதல் அதிகம் கொண்டுள்ளனர். அலுவலகங்களுக்குச் செல்வோரும், பெரியவர்களும் அதிக அக்கறை காட்டுவதில்லை. ஃபேஷன் முன்னேற்றம் அடைந்தால்தான் துணிகளின் தரமும், உற்பத்தியும் அதிகமாகும்.

''ஃபேஷனுக்கு எல்லா வர்க்கத்தினரையும் ஈர்க்கும் சக்தி உண்டு. சமூகத்தின் பல சாதாரண வருவாய் உள்ள குடும்பத்து இளைஞர்கள் கூடத் தற்போது பெல்பாட்டம் பேண்டையும் நீள காலர் கொண்ட சட்டையையும் விரும்புகிறார்கள். பெண்களில் பலர் பேண்ட், குர்த்தா அணியவே ஆசைப்படுகிறார்கள்;



✖ தையல் கலைஞர் திரு ஜகரியா அளவெடுக்கிறார்

''நான் சினிமா கதாநாயக நாயகியருக்கும் துணி தைக்கிறேன். சமீபத்தில் ''நீயா'' படத்துக்காக ஜெய்கணேஷ் அணியும் சூட் தைக்கச் சொன்னார்கள். நான் அதை மேல் நாட்டு ஃபேஷன் புத்தகங்களின் துணை கொண்டு, நாகரீகத் தோற்றத்தோடு செய்து முடித்தேன். இதைப் பார்த்த நிறுவனத்தினரும், ஜெய்கணேஷும் என்னைப் பாராட்டியது எனக்கு சந்தோஷத்தைக் கொடுத்தது.

''தற்போது குழந்தைகள் டெனிம் ஜீன்ஸ் மற்றும் கௌபாய் ஜீன்ஸ் அதிகம் அணிகிறார்கள். பார்ப்பதற்கு மிகவும் ரம்யமாக இருக்கிறது.

''வயதானவர்கள், எல்லோரும் தொள தொள பேண்டும், சட்டையும்தான் கேட்கிறார்கள். நான் ஏதாவது மாறுதல் செய்ய விரும்பினாலும், அவர்கள் விரும்புவதில்லை. இந்த உடைகள் அவர்கள் வயதைச் சற்று அதிகரித்தே காட்டுகின்றன.

''மேல்நாட்டு ஃபேஷன்களை நம்மவர்கள் கிண்டல் செய்யாமல் வரவேற்க வேண்டும். எல்லா சாராரும் ஃபேஷனுள்ள ஆடைகளை அணிந்தால், நாகரீகம் மட்டுமல்ல, நாடும் முன்னேறும் என்பது என் கருத்து'' என்று ஒரு போடு போட்டு முடித்தார் ஜகரியா.

பேட்டி: ''சிக்கி.

# நாகரிக பூமியின் பாவத்தின் விழுதுகள்




ஏ.வி.எம். கணேஷ்

டீப்பாயின் மீது விரிந்து கிடந்த ''சண்ஸ் வீக்லி''யில் பார்வை மேய்ந்து கொண்டிருக்க, 'பைப்'பில் புகையிலையைத் திணித்துக் கொண்டிருந்த அவர் அவனைக் கண்டதும் நிமிர்ந்தார்...

''குட் மார்னிங் ஸார்!...''

''வெல்கம் ஜெண்டில்மேன்... யார்... நீ?''

''என் பெயர் ஜேம்ஸ். உங்கள் மகளைச் சந்திக்க வந்திருக்கேன்...''

''எந்த மகளைச் சொல்கிறாய்... ஸ்டெல்லா பெங்களூர் டூர் போயிருக்கா... மேரி நேற்று ஆபீசுக்குப் போனவள் — இரண்டுநாள் கழித்துத் தான் வீட்டுக்கு வருவேன்னு நேற்று பத்து மணிக்கு 'மெஸேஜ்' கொடுத்தாள்...''

அவர் அலட்சியமாகக் கூறிக் கொண்டிருந்தார்.

''நான் தேடி வந்தது உங்கள் மூன்றாவது மகள் ஜேஸ்மினைத்தான்...''

''ஓ... மிஸ் மை தேர்ட் டாட்டர்... ப்ளீஸ் பி ஸிட்டட்... ஜெண்டில்மேன்... நான் அவளைக் கூப்பிடுகிறேன்...''

'பைப்'பைப் பற்றவைத்த அவர் 'இண்டர் கா'மில் மகளை அழைத்தார்.

''எஸ்... சைல்ட்... யெஸ்... ஜேம்ஸ்... யூ ஆர் கரெக்ட்... ஹி... இஸ் வெயிட்டிங் ஃபார் யூ... ஓ... கே...''

இண்டர்காமை மீண்டும் பொருத்தினார்.

''ஜெண்டில்மேன்... ஜேஸ்மின் உன்னை அவள் அறைக்கு வரச் சொல்கிறாள்... இதோ இந்த மாடிப்படியைக் கடந்து வலது பக்கமாகத் திரும்பினால் மூன்றாவது அறை அவளுடையது. தப்பித் தவறி இரண்டாவது அறைக்குள் நுழைந்து விடாதே...''

''ஏன் சார்...?''

''அது என் மனைவியின் 'பிரைவேட்' ரூம்''

அவர் சிரித்தார். அவன் விழுந்து விழுந்து சிரித்தான்.

'டை'யைச் சரி செய்து கொண்டு, மாடிப் படிகளை இரண்டே எட்டில் பின்னுக்குத் தள்ளி விட்டு, வலது பக்கமாகத் திரும்பி, இரண்டாவது அறையை அரைக் கண்ணால் பார்த்து விட்டு மூன்றாவது அறைக்குள் நுழையும் போது...

கில்பர்ட் 'ஓ'வின் 'எலோன் எகெயின்' ஸ்டீரியோவில் வழிந்து கொண்டிருந்தது. அதையும் மீறி ஜேஸ்மினின் விசில் ஒலி ஒலித்துக் கொண்டிருந்தது.

''குட் மார்னிங் டியர்...''

அவன் அவள் அறைக்குள் நுழைந்தான்.

''வெல்கம் டு யூ...''

அவள் முறுவலித்தாள். அதற்கு விடையாக அசடுவழிய அவனும் சிரித்துக்கொண்டே ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டு, அமர்ந்து கொண்டு, சிகரெட்டை உதடு இடுக்குகளில் பொருத்தி, லைட்டரை பேண்ட் பாக்கெட்டில் துழாவித் தேடும்போது...

அவனை நோக்கி ஓடிவந்த ஜேஸ்மின் அவன் வாயிலிருந்த சிகரெட்டைப் பறித்துக் கொண்டாள்.

''ஜேம்ஸ்... நீ ஒவ்வொரு தடவையும் சிகரெட் குடிக்கிற போது நானே என் கையாலே சிகரெட் எடுத்துக் கொடுத்து, நானே அதை உன் உதடுகளில் பொருத்தி — நானே பற்ற வைக்க வேண்டும் என்று எத்தனை தடவை சொல்லியிருக்கிறேன்... ஜேம்ஸ்... நீ ஸ்மோக் பண்றதுலே எனக்கு ஒரு திருப்தி... மஞ்சள் முனையுடன் கூடிய பில்டர் சிகரெட் 'ஷேப்' என்ன பியூட்டிஃபுல் ஷேப்...''

''ஓ... கே... ப்ரொமிஸ்...''

அவள் பற்ற வைத்தாள். முதல் இழுப்பின் வெளியீடுகளை அவள் முகத்தில் அவன் படர விட்டான்... அவள் அப்புகை மணத்தை முகர்ந்து உடலைச் சிலிர்த்துக் கொண்டாள். பிறகு...

''ஒன் மினிட்...'' என்று கூறியபடி நீலநிற மாக்ஸி தரையில் தவழ அவள் அறையை விட்டு வெளியேறினாள்.

சற்று நேரத்தில், வெளிப்பக்கம் வியர்த்துப் போயிருந்த 'டபுள் செவன்' பாட்டிலை முந்திரிக் கொட்டையாக நீட்டிக் கொண்டிருந்த ஸ்டிராவுடன் அவள் முன் நீட்டினான்.

அவள் 'டபுள் செவன்' ஒரு தடவை, 'டிரிபிள் ஃபைவ்' ஒரு தடவை என மாறிமாறி உறிஞ்சிக் கொண்டிருந்தாள்.

''இன்றைக்கு என்ன புரோகிராம் ஜேம்ஸ்...''

''உடனே புறப்படு என்னோடு...''

''இதே டிரஸ்ஸிலா...''

''அது கூடத் தேவையில்லை...''

''டாட்டி...''

''நோ... பியூட்டி... இன்றைக்கு நீ அழகிப் போட்டியில் கலந்து கொள்ளப் போகிறாய்...!''

''மீ?''

''யா...''

''எங்கே?...''

''ஹோட்டல் சேரா...''

''இதோ...''

அவள் புறப்பட்டாள். அவர்கள் இடது பக்கம் திரும்பினார்கள். மாடிப்படியில் இறங்கினார்கள்.

பைப்பின் சாம்பலை ஆஷ் டிரேக்குத் தாரை வார்த்துக் கொண்டிருந்தார் அப்பா...

''டாட்...'' அவள் அழைத்தாள்.

''எஸ்... சைல்ட்...''

''நானும் ஜேம்சும் வெளியே போகிறோம்.''

''எப்போ திரும்பி வருவே?...''

அவள் அவனைப் பார்க்கலானாள்.

''நைட் எட்டு மணிக்கெல்லாம் திரும்பிடுவோம் சார்...'' அவன் கூறுகிறான்.

''அப்போ இராத்திரி சாப்பாடு உனக்கு வேணுமா வேண்டாமா என்பதையும் ஆயாவிடம் சொல்லிடு... பிறகு உங்க அம்மாவுக்குப் பதில் சொல்றது கடினம்...''

இதற்கும் அவள் அவனைப் பார்க்கிறாள்...

''நைட் டின்னர் ஹோட்டல் சேராவில்...!'' அவன் கூறுகிறான்.

''தென்... ஓ.கே... நான் ஆயாவிடம் சொல்லிடறேன்... நீ புறப்படு சைல்ட்... பாவம், ஜேம்ஸ் எவ்வளவு நேரம் வெயிட் பண்ணுவான்.''

''தேங்க்யூ டாட்... ஆமாம் டாட் இன்றைக்கு உங்க புரோகிராம் என்ன?''

''நோ... இப்போ சொல்ல மாட்டேன்...''

''என்ன டாட்... என்னிடம் சொல்ல முடியாத அளவுக்கு அப்படி என்ன புரோகிராம்?''

''நோ... நோ... நீ நினைக்கிற மாதிரி இல்லே... நாளை காலை டிபன் சாப்பிடும் போது சொல்றேன்...''

''ஓ... கே...''

''தேங்க்... யூ... ஸார்...''

''பை... த... பை... மாடியிலே ஸ்டீரியோ பாடிக்கிட்டு இருக்கு. அதைக் கொஞ்சம் நிறுத்திடுங்க டாடி...''

''ஓ... எஸ்...''

எவனோ ஒருவனுடன் வீட்டுக்கு வெளியே செல்லும் மகளைத் தடுத்து நிறுத்தாத அவர் வீட்டுக்குள் பாடிக் கொண்டிருக்கும் ஸ்டீரியோவை நிறுத்துவதற்காக அவசர அவசரமாக மாடிப்படிகளில் ஏறிக் கொண்டிருந்தார்.

**ஹோட்டல் சேரா...**

சங்க காலத்து காவிரிப் பூம்பட்டினம் துறைமுகத்தில் வந்து நிற்கும் நாவாய்களின் மீது பறந்து கொண்டிருந்த பலவண்ணக் கொடிகளைப் பட்டினப்பாலையில் கடியலூர் உருத்திரங் கண்ணனார் விவரிப்பது போன்று, பல வகை கொடிகள் பல வண்ணங்களில் அந்தரத்தில் நெளிந்து கொண்டிருக்கின்றன.



பட்டுச் சேலைகளும், மாக்ஸிகளும், பெல்ஸ் களும், பேரலல்களும் அங்குமிங்கும் வேற்றுமை காட்டித் தரையில் தவழ்ந்து கொண்டிருக்க, தலைக்கு மேலே சார்மினார்களும், டிரிபிள் பைவ்களும், வில்ஸ் பில்டர்களும் வேற்றுமையின்றி ஒற்றுமையாக உறவாடி 'ஏ. சி.'யால் உறிஞ்சப்பட்டுக் கொண்டிருந்தன.

ஜேம்சுடன் 'புல்லட்'டில் வந்து இறங்கிய போது அங்கு நிலவிய சூழ்நிலை முதலில் 'ஜேம்ஸை ஒரு கார் வாங்கச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால், கார் வைத்துள்ள இன்னொரு ஜேம்ஸைத் தேட வேண்டு'மென ஜெஸ்மினுவை எண்ணத் தூண்டியது.

நிசப்தமான 'ஏ. சி.' வெளி உலகை அறவே மறக்கச் செய்துகொண்டிருக்க, அதற்குத் தூபம் போட்டுக் கொண்டிருந்தது அரை குறையாக எரிந்து கொண்டிருந்த நோவாட்ஸ்கள்.

போட்டி நடக்கும் மேடையை ஒளி வெள்ளம் ஆக்கிரமித்திருந்தது.

பார்வையாளர்கள் பகுதியில் ஜேம்ஸ் அமர்ந்து கொண்டான். அறிவிப்பாளரும் அழகிகளும் மட்டுமே மேடைக்குள் அனுமதிக்கப் பட்டனர். ஆயிற்று. கால்... மணி... போட்டி தொடங்கப்படவில்லை...

பார்வையாளர் பகுதி கசமுசத்தது. அறிவிப்பாளர் தொண்டையைச் சரி செய்து கொள்கிறார்.

''பிரதர்ஸ்... அண்ட்... சிஸ்டர்ஸ்... (விவேகானந்தரே... இவர்கள் சொல்வது இன்னதென்று அறியாது செய்கிறார்கள். இவர்களை மன்னியும்!) இப்போது நடக்கும் அழகிப்போட்டி புதுவிதமாக நடைபெறப் போகிறது. போட்டியில் கலந்து கொள்ளும் அழகிகள் எந்த உடையிலும் வரலாம். தோன்றலாம்... எவ்விதக் கட்டுப்பாடும் கிடையாது. ஆனால் போட்டி முடிவில் அவர்கள் நீச்சல் உடையில் தோன்ற வேண்டியது அவசியம்... மேலும் அழகிகளைத் தேர்ந்தெடுக்கும் நீதிபதிகளின் எண்ணிக்கை ஆறு. அந்நீதிபதிகள் 'யார்?' என அடையாளம் தெரிந்து கொள்ளக் கூடாது என்பதற்காக அவர்களைப் பார்வையாளர்களின் நடுவே அமரச் செய்துள்ளோம்... அந்த ஆறு நீதிபதிகளில் ஒரே ஒருவர் மட்டும் இன்னும் வரவில்லை... இன்னும் சில நிமிடங்களில் வந்து விடுவதாகத் தகவல் வந்துள்ளது... எனினும் போட்டியைத் தொடங்குகிறோம்... முதலில்.. மிஸ்...''

பல வண்ண ஒளிக்கற்றைகள் அரங்கத்தில் ஆடிவரும், நடந்து வரும், திரும்பித் திரும்பி, சிரித்துச் சிரித்துச் செல்லும் அழகிகளின் நிறத்துக்கு ஏற்ப ஆடையின் வண்ணத்துக்கு இணையாகச் சிதறிக் கொண்டிருக்கின்றன. அரங்கத்தை ஓர் அழகி கடந்து முடிக்கும் போது அதுவரை நிலவியிருக்கும் தற்காலிக மௌனத்தைக் கரவொலி கற்பழிக்கிறது.

போட்டியில் முதல் கட்டம் முடிகிறது. அடுத்த கட்டம் நீச்சல் உடை நடை.

அறிவிப்பாளர் லாகவமாக மைக்கைச் சுழற்றிவிட்டுக் கூறுகிறார்.

''லேடீஸ்... அண்ட்... ஜெண்டில்மென்... (ஓ... யாரு... விவேகானந்தரா... உம்ம மன்னிப்புத் தேவையில்லை ஓய்...!) மகிழ்ச்சிகரமான இரு செய்திகள். ஒன்று இதுவரை நீங்கள் ஆவலுடன் எதிர்பார்த்த நீச்சல் உடை அழகுப் போட்டி துவங்க இருக்கிறது... மற்றொன்று நாங்கள் ஆவலுடன் எதிர்பார்த்த ஆறாவது நீதிபதியும் வந்து, பார்வையாளர்களில் ஒருவராய் அமர்ந்து விட்டார்...''

நீச்சல் உடை அழகு நடை முடிகிறது. 'பிறவிப் பயன்' பெற்ற பேரின்பத்துடன் பார்வையாளர் கூட்டம் கலைகிறது. ஜெஸ்மினுவைத் தேடி ஓடுகிறான் ஜேம்ஸ்.

பதினைந்து நிமிட இடைவெளிக்குப் பிறகு போட்டி முடிவு அறிவிக்கப்படுகிறது. தேர்வு பெற்ற அழகிகள் மட்டுமின்றி, அவர்களைத் தேர்வு செய்த நீதிபதிகளும் அறிமுகப்படுத்தப் படுகின்றனர். ஆனால் காலதாமதமாக வந்த ஒரு நீதிபதி, போட்டி முடிந்ததும் சொல்லாமல் வெளியேறி விட்டாராம். எனவே அவர் அறிமுகப்படுத்தப் படவில்லை.

போட்டியில் ஜெஸ்மினு வெற்றி பெறவில்லை. முடிவு அறிவிக்கப் படும்பொழுது ஜேம்ஸின் தோளில் சாய்ந்து கொண்டிருந்த அவள் விருட்டென்று அவனிடமிருந்து விலகி அறிவிப்பாளரைப் பார்த்தாள்.

''டேக் இட் ஈஸி.'' அவன் அவளை மீண்டும் தன் தோளில் சரித்துக்கொண்டான்.

மறுநாள்...

காலை மணி எட்டு... 'டைனிங் டேபி'ளின் முன்னே அமர்ந்திருக்கிறாள் ஜெஸ்மினு. ஆவி பறக்கும் இட்லிகளை ஆயா எடுத்து வருகிறாள்.

''அப்பா... எங்கே... ஆயா?''

''காலையிலே எழுந்து சர்ச்சுக்குப் போயிட்டாரும்மா...''

''சரி... சரி... சட்னியை ஊற்று...''

தேவாலயம்...

காலை பிரார்த்தனை நடந்து கொண்டிருக்கிறது. பாவமன்னிப்பு அளிக்கும் பெட்டகத்தில் பாதிரியார் அமர்ந்திருக்கிறார். அவர் அருகே முழங்காலிட்டுப் பாவ மன்னிப்புக் கேட்டுக் கொண்டிருந்தார் ஜெஸ்மினுவின் அப்பா —

அவர் ''என்ன பாவம் செய்தார், எதற்காக மன்னிப்புக் கேட்கிறார்'' என்பதை அந்தப் பாதிரியார் கூட வெளியே சொல்லக்கூடாது!

---

## இதுதான் இன்றைய :: பாஷன்

அரசியல்வாதி  கொலை மிரட்டல் வந்ததாக அறிக்கை விடுதல்

மக்கள், ஆசிரியர்கள்.  போராட்டங்களில் இறங்குதல்

பத்திரிகைகள்  சிறப்பு மலர்கள் வெளியிடுவது

ஆட்சியாளர்கள்  விசாரணைக் கமிஷன் அமைத்தல்

- எஸ். எஸ்.

# நயம்
# நவீனம்
# நாகரீகம்
# ராசி!
பட்டுப்
புடவைகள்

**ராதா சில்க் எம்போரியம்**
சந்நிதித் தெரு, மயிலாப்பூர்
சென்னை-600004

**ராதா சில்க் எம்போரியம்**
29, கோவிந்த் மஹால்,
86-B மரைன் டிரைவ்,
பம்பாய்-400 002

**ராதா சில்க்ஸ்**
'தன் பில்டிங்ஸ்,' மவுண்ட் ரோடு,
சென்னை-600 002



ராதா சில்க்கின் ராசி
உன்னத வாழ்வுக்கு ஆசி

வெண்மை ஒளிவீசிப்
பளிச்சிடும்
பார்த்தவரெல்லாம் கூறுவர்...

இது

**டெட்**

டிடர்ஜெண்ட்
கட்டியின்
சலவை




Shilpi DM 35A/78 Tam

# தியாக வல்லபன்

விக்கிரமன்

## அத்தியாயம் 8

## கண்டறியாதன கண்டாள்!

''உங்களைத்தான் தேடி வந்தேன்'' என்று பெரும் பொய்யைக் கூறியது கேட்டு, அல்லியின் கணவன் கோவிந்தன் திடுக்கிட்டான். தான் எதற்கு வந்து மாளிகை வாயிலில் நின்று கொண்டிருக்கிறோம் என்பதை அறிந்தால் கணவன் கோபங் கொள்வானே என்ற அச்சமும் அல்லியின் மனத்தில் எழாமலில்லை. கோவிந்தனும் அல்லியும் என்ன சமாதானம் சொல்வது என்று ஒருவருக்கொருவர் யோசித்துக் கொண்டிருந்தனர்.

கோவிந்தனே முதலில் பேச்சை ஆரம்பித்தான். ''அல்லி, என்னைத் தேடிக் கொண்டு இவ்வளவு தூரம் எப்படி வந்தாய்? வழி தெரிந்ததா?'' என்று குரலில் ஆசை தவழக் கேட்டான். 'ஏன் வந்தாய்?' என்று கேட்கவில்லை.

அல்லிக்குக் கோபம் வந்தது. ''நீங்கள் இங்கு எப்படி வந்தீர்கள்?'' என்று கேட்டாள். என்ன சொல்வது என்று ஒருகணம் திகைத்தான் கோவிந்தன்.

''குளிப்பதற்காக ஆற்றங்கரைக்குச் சென்றேன். அங்கே என்னைத் தேடி மல்லப்ப தேவனின் அந்தரங்க ஆட்கள் வந்து விட்டனர். உடனே வருமாறு என்னை வற்புறுத்தினர். மாற்றுடை கூட எடுத்துக் கொள்ளவில்லை. உன்னிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு விட்டேன்'' என்று மெல்லச் சிரித்தவாறு கூறினான். பிறகு, ''நான் இங்கு வந்திருப்பேனென்று உனக்கு எப்படித் தெரியும்?'' என்று அவன் கேட்டபோது அசட்டுத்தனம் அதில் ஒளி வீசியது.

''எனக்குத் தெரியாதா? உங்கள் நடவடிக்கைகள் எனக்குப் புரிந்து விட்டன. உங்கள் துரோகச் செயலுக்கு எல்லையே கிடையாதா?'' என்று அல்லி சீறினாள்.

''என்ன துரோகம் செய்து விட்டேன்?'' — என்று அவளை எரித்து விடுபவன் போல் பார்த்து அவன் கேட்டான்.

''இதோ இங்கே வந்திருக்கிறீர்களே அதுவும் துரோகச் செயல்தான்'' என்றாள் அல்லி.

''இது எப்படித் துரோகம் ஆகும்? என் கடமையைச் செய்யத்தான் வந்திருக்கிறேன்.''

''எது கடமை?''

''என் கடமை எது, என்ன என்று நீ கேட்பது சரியல்ல. ராஜாங்கத்தில் வேலை செய்பவன், மேலதிகாரிகளின் உத்தரவுப்படி நடப்பது கடமை.''

''உங்கள் மேலதிகாரி படைத் தலைவர். அவர் சொல்படி நடக்கிறீர்களா? உரிமை அற்ற ஒருவர் அரசருக்குத் துரோகம் செய்யப் பார்க்கிறாரே, அவர் சொல்படிதானே நடக்கிறீர்கள்?'' — அல்லியின் சொற்கள் அழுத்தம் திருத்தமாகப் பாய்ந்தன.

அல்லியின் பேச்சு அவனுக்குத் திகைப்பை அளித்தது. இவ்வளவு திறமையுடன் அல்லி பேச எப்போது கற்றுக் கொண்டாள்? அவள் தன்னைத் தேடி வரவில்லை என்பதை அவனுடைய உள்ளுணர்வு கூறியது.

''குடிலை விட்டு வேறு எங்கும் சென்றறியாத நீ இங்கு எப்படி வந்தாய்?'' என்று கோவிந்தன் கேட்டான்.

''மாட்டு வண்டியில் மிக்க வசதியுடன் வந்தேன்'' என்றாள் அல்லி.

''வந்தாய் — என்னை எங்கே தேட நினைத்தாய்?''

''நகரம் முழுமையும். துரோகக் கூட்டம் எங்கிருக்கிறதோ அங்கெல்லாம்.''

''அப்படியென்றால் மாளிகையின் வாசலில் ஏன் நிற்கிறாய்?''

''மாளிகையில் நீங்கள் இருப்பீர்கள் என்று நினைத்தேன்.'' அல்லி இவ்வாறு கூறியவுடன், கோவிந்தன் திடுக்கிட்டான். எனினும் வெளிக்குப் புலப்படுத்திக் கொள்ளாமல், ''சரி,



மனைவி: என்னங்க, நீங்க பண்றது கொஞ்சம் கூட நல்லா இல்லே.

கணவன்: என்னடி அப்படி நான் பண்ணிட்டேன்?

மனைவி: வருஷா வருஷம் பெயிலாயின்டே வர நம்ம பையன் பரீக்ஷை எழுதப் போயிண்டிருக்கான், நீங்க என்னடான்னு கோட்டு வாத்தியம் வாசிச்சுக்கிட்டு இருக்கேளே?

எஸ். சந்திரசேகர்.

அப்படியென்றால் மாளிகையின் வெளியே ஏன் நிற்கிறாய்?'' என்று கேட்டான்.

அல்லிக்கு எரிச்சல் வந்தது. ''நீங்கள் உள்ளே இருப்பீர்கள் என்று நான் நினைக்கவில்லை. ஆனால் அந்தக் குழந்தைகள் இரண்டும் உள்ளே இருக்கின்றன. நான் அவர்களைப் பார்த்தாக வேண்டும். பொழுது விடிந்து இவ்வளவு நேரமாகி விட்டது. குழந்தைகள் துடித்துக் கொண்டிருப்பார்கள் என்பதை நினைத்தால் என் உடல் துடிக்கிறது'' என்றாள் அல்லி.

கோவிந்தன் புரிந்து கொண்டு விட்டான். குழந்தைகளைப் பறிக்க அவன் வந்திருக்கிறான். பார்க்க அவள் வந்திருக்கிறாள்! அல்லிக்கு யாரோ சதித் திட்டம் முழுமையையும் சொல்லியிருக்கிறார்கள். அவளிடமிருந்து மெல்ல உண்மையை அறிவதற்காகச் சிரிப்பை உதடுகளில் பிறக்க வைத்து, ''குழந்தையைத் தேடி இங்கு வருவானேன்? குழந்தை வேண்டுமென்றால் நமது குடிலுக்கே வராதா?'' என்று சம்பந்தமில்லாமல் பேசினான்.

அல்லிக்கு ஆத்திரம் அதிகமாகியது.

''குழந்தை குடிலுக்கு வருமாம்! இருந்த குழந்தையைத்தான் பறி கொடுத்து விட்டு நிற்கிறேனே! குழந்தை இறந்த துக்கத்தை மாற்றுவதற்கு என் அருகில் இல்லாமல் வீட்டுக்கும், நாட்டுக்கும் துரோகம் செய்யத் துணிந்து விட்டீர்களே! நீங்கள் செய்திருக்கும் செய்யப் போகும் பாபச் செயலுக்குப் பரிகாரம் தேட வந்திருக்கிறேன்'' என்று அல்லி அழுத்தம் திருத்தமாகப் பேசினாள்.

''ஓ! நான் செய்வது பாபக்காரியம். நீ செய்வது? கணவனுக்கு விரோதமாகச் செயல்பட வந்து விட்டாயே, அது பாபமல்லவா?'' என்று கோவிந்தன் கேட்டான்.

''நாட்டுக்கு விரோதமாகச் செயல் புரியும் கணவனைத் திருத்துவது நியாயமானதே. ஆனால், நான் சொல்லி நீங்கள் திருந்தப் போவதில்லை. என்றாலும் உங்கள் செயலைத் தடுத்து நிறுத்த முடியுமா என்று பார்க்கவே இங்கு வந்தேன்'' என்றாள் அல்லி.



கோவிந்தன் திகைத்தான். தன் மனைவியின் துணிகரமான பேச்சைக் கேட்டுத் திகைத்தான். அவன் எதிர்பார்த்தது போல் தன் திட்டங்களை முறியடிக்க யாரோ இவளை ஏவி இருக்கிறார்கள் என்று முடிவு செய்து கொண்டான். அதிக நேரம் அங்கே நின்று விவரித்துக் கொண்டிருக்க அவனால் இயலவில்லை. மல்லப்ப தேவன் காத்திருப்பான். அன்று பகல் பொழுதுக்குள் மிக முக்கியமான முடிவை எடுத்தாக வேண்டும். சோழ கேரளன் மாளிகையைச் சூழ்ந்து கொண்டு திடீரெனத் தாக்கத் திட்டம் வகுக்க வேண்டும். யார் யார் எங்கெங்கு நிற்பது என முடிவு செய்து கொள்ளவேண்டும். மாளிகைக்குள் ஊடுருவிச் சென்று மறைந்து நிற்பவர்கள் யார், அந்தப் புரத்தில் குழந்தைகள் இருக்கும் மேல் மாடப் பகுதியில் இருந்து சமயம் பார்த்துக் குழந்தைகளைக் கவர்ந்து செல்பவர் யார் என்ற முடிவை மிகத் துல்லியமாக முடிவு செய்ய வேண்டும்

அவன் திட்டத்தை நிறைவேற்ற வந்திருக்கிறான். அவன் மனைவி அதை முறியடிக்க வந்திருப்பாளோ?

அப்போதே, மிகக் கண்டிப்புடன் பேசி, அல்லியைத் திரும்பி ஊருக்குப் போகுமாறு செய்து விடலாம். ஆனால், கோவிந்தன் ஒரு கணம் சிந்தித்தான். அல்லியை விட்டுப்பிடிக்க வேண்டும். அல்லியை வைத்துக் கொண்டே, சதித் திட்டத்தை நிறைவேற்றிக் கொள்ளலாம். இந்த யோசனையைச் சொன்னால் மல்லப்ப தேவன் பாராட்டுவார் என்று முடிவு செய்து கொண்ட கோவிந்தன், அந்த இடத்திலிருந்து புறப்படுவது எப்படி என்று யோசித்துக் கொண்டிருந்த போது நான்கு குதிரைகள் வேகமாக வருவது அவனுக்குத் தெரிந்தது. அவர்கள் கோவிந்தனுடைய கூட்டாளிகள். அவன் அங்கு நிற்பதைக் கண்டால் கோபப் படுவார்கள்.

கோவிந்தன் விரைந்து குதிரை மீது ஏறி, அல்லியின் செவிகளில் மட்டும் விழுமாறு, ''அல்லி! உன்னைப் பிறகு சந்திக்கிறேன். என் செயலில் குறுக்கிட்டு வெற்றியடைந்து விடலாம் என்று ஒருகாலும் நினைக்காதே. நீ இனி செய்யப் போகும் ஒவ்வொரு காரியமும் எனக்கு உதவியாகத்தான் இருக்கப் போகிறது. அதுதான் உத்தமமான மனைவிக்கு இலட்சணம்'' என்று கூறிக் குதிரையைத் தட்டி விட்டு விரைந்தான்.

அவன் போகும் திக்கையே பார்த்தவாறு நின்று கொண்டிருந்த அல்லி, எவ்வளவு நேரம் மரத்தடியிலேயே நின்று கொண்டிருப்பது என்று கவலை கொண்டாள். அடையாள மோதிரத்தைக் காட்டி மாளிகைக்குள் நுழைந்து விடுவோமா என எண்ணினாள்.

மிக விரைவில் மாளிகைக்குள் செல்ல வேண்டும். பெரிய பிராட்டியாரைச் சந்தித்துக் குழந்தை



களின் பராமரிப்பை ஏற்க வேண்டும். இந்நேரம் அந்தப் பச்சிளங் குழந்தைகள் பாலின்றி வாடி அழுதிருக்கும். அன்புடன் அரவணைக்க ஆளின்றிக் கதறியழுது கொண்டிருக்கும். நமக்கிட்ட பணியை நிறைவேற்றாமல் நேரத்தை வீணடித்து விட்டோமே என்ற எண்ணம் தலைதூக்கியவுடன் எப்படியாவது மாளிகைக்குள் நுழைந்து விடுவது என்று முடிவு செய்து விட்டாள்.

அப்போது இருபது முப்பது பேர்கள் இருக்கும் — பெண்கள் கூட்டமாக வந்து கொண்டிருந்தனர். சிலர் தலையில் கூடைகள் இருந்தன. கீரைக் கட்டுகள் இருந்தன. துணி மூட்டைகள் இருந்தன. வளையல்கள் கோத்துத் தோளில் ஒரு பெண் தொங்கவிட்டிருந்தாள். அவர்களைப் பார்க்கும் போது அவர்கள் மாளிகையில் உள்ளவர்களுக்குப் பண்டங்கள் விற்பவர்கள் போல் தோன்றினர். மாளிகைக்குள் அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்களும், உறவினர்களும் வசித்து வந்தனர். வயது முதிர்ந்த இளையராணிகள் பலரும், குலோத்துங்கனின் உறவினர்களும் வாழ்ந்து வந்தார்கள்.

அல்லிக்கு ஒரு கணத்தில் யோசனை பளிச்சிட்டது. தானும் அவர்களுள் ஒருத்தியாக உள்ளே நுழைந்து விட முடிவு செய்தாள். தன்னிடமிருந்த துணி மூட்டையைத் தலையின் மீது வைத்துக் கொண்டாள்.

காவலர்கள் ஒவ்வொருவரையும் கூர்ந்து பார்த்தே உள்ளே அனுமதித்துக் கொண்டிருந்தனர். அதோ — அவள் நெருங்கி விட்டாள். அல்லிக்கு இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது. தன்னையும் எங்கே தடுத்து நிறுத்தி விடுவார்களோ என்று பயந்தாள்.

### பாவாடை உயர்ந்தால் மாக்ஸி!

பெண் குழந்தைகளின் பாவாடை உயர்ந்து விட்டால் (குட்டையாகி விட்டால்) அதே கலரில் சற்று நீளமான ஜாக்கெட்டைத் தைத்து பாவாடையின் இடுப்பு பாகத்தில் இரண்டையும் சேர்த்து தைத்து விடுங்கள். புதிய 'மாக்ஸி' உருவாகி விடும். வேண்டுமானால் பாவாடையின் கீழ் பக்கமும் ஜாக்கெட் தைத்த அதே துணியில் பிரில் (Frill) வைத்துக் கொள்ளலாம். மிகவும் கவர்ச்சிகரமாக இருக்கும். —மீனாட்சி வைத்தியநாதன்



கடவுளை வேண்டிக் கொண்டாள். தன் தந்தையின் நல்லாசியை நினைத்துக் கொண்டாள். பெருமான் நம்பி தனக்கு இட்ட கட்டளையை நினைத்துக் கொண்டாள். ஏன் அவள் கவலைப்பட வேண்டும்? அடையாள மோதிரத்தைக் காட்டிச் சுலபமாகச் சென்று விடலாம். ஆனால் மிகமிகத் தேவைப்பட்டால்தான் அதை உபயோகிக்க வேண்டும் என்று தன் தந்தை எச்சரித்திருந்தது அவளுக்கு நினைவுக்கு வந்தது.

அவள் காவலரைக் கடந்து உள்ளே சென்று விட்டாள். இனி அவளுக்குப் பயமில்லை. உள்ளே நுழைந்தவுடன்எந்தப் பக்கம் போவது என்று தெரியாமல் திகைத்தாள். அருகே சென்று கொண்டிருந்த ஒருத்தியிடம் பேச்சுக் கொடுத்தாள்.

''பெரியபிராட்டி எங்கே இருக்கிறார் என்று உங்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள். அவள், அல்லியை ஏற இறங்கப் பார்த்து ''இந்த மாளிகையின் கோடியில் மேல்மாடத்தில் இருக்கிறார்கள்; நீ யாரம்மா? பெரிய பிராட்டியைப் பார்க்க வேண்டுமா?'' என்று அன்பாகக் கேட்டது. அல்லியின் மனத்தில் புதிய தெம்பை அளித்தது.

மேலும் அந்தப் பெண்ணிடம் பேச்சுக் கொடுத்து, அவளைப் பற்றித் தெரிந்து கொண்டாள்.

''நாங்கள் எல்லாம் கோட்டைக்கு வெளியே புறப்பாடியில் வசிப்பவர்கள். வேளாண் குடி மக்கள். மாளிகையில் வசிப்பவர்களுக்கு வேண்டிய நவதான்யங்கள், காய்கறிகள், துணிகள் போன்றவற்றை விற்பனைக்குக் கொண்டு வருவோம்'' என்று சொன்னாள்.

''நீங்கள் ஏன் வர வேண்டும்? அந்தப்புரப் பெண்டிருக்குப் பணிப்பெண்கள் இல்லையா? அவர்கள் வந்து வாங்கிச் செல்ல மாட்டார்களா?'' என்று அல்லி கேட்டாள்.

அந்தப் பெண் பெருமூச்சு விட்டாள். ''மாளிகையில் இப்போது பணிப்பெண்களும், தாதிகளும், செவிலியர்களும் குறைந்து விட்டார்கள். அவர்கள் வேண்டிய பொருள்களை வாங்க மாளிகையிலிருந்து வெளியே வருவது கிடையாது. அதனால் வாரம் ஒரு தடவை நாங்களே மாளிகைக்குக் கூட்டம் கூட்டமாக வந்து விற்கிறோம். வாரம் ஒரு தடவை அரச குலத்து மக்களைச் சந்திப்பதில் எங்களுக்கும் மகிழ்ச்சி. வாங்கும் பண்டங்களுக்கு உரிய விலையைக் கொடுப்பதுடன், சமயத்தில் பரிசுப் பொருள்களும் தருவார்கள். எங்களுடன் கலகலப்பாகப் பேசுவதில் அவர்கள் ஆனந்தமடைவார்கள்'' என்று கூறினாள், நடந்து கொண்டே.

''கங்கை கொண்ட சோழ புரத்துக்கு, மகாராஜா வருவதேயில்லையா?'' என்று அல்லி கேட்டாள்.

''அவர் வந்து பல மாதங்களாகி விட்டன. அவர் இங்கே வந்தால் அவருக்குத் துக்கம் இன்னும் அதிகமாகி விடுமாம்'' என்றாள் அந்தப் பெண்.

''அவருக்கு என்ன துக்கம்?'' — அல்லி அறியாதவள் போல் கேட்டாள்;



''என்ன பையனைப் பள்ளிக் கூடத்திலே சேர்க்காம கூட்டியாந்துட்டீங்க?''

''நான் போனப்ப மச்சரம்மா, திருடக் கூடாது. பொய் சொல்லக் கூடாதுன்னு பையன்களிடம் சொல்லிட்டிருந்துச்சு. நம்ம பையன் கெட்டுப் போயிடுவான்னு கூட்டியாந்துட்டேன்!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''ஆகா; உனக்கு ஒன்றுமே தெரியாதா? தன் அருமை மனைவியைப் பறி கொடுத்துப் பித்துப் பிடித்தவர் போல் பழையாறையிலேயே தங்கி இருக்கிறாரே...''

''மனைவியைப் பறி கொடுத்ததற்காக ஓர் அரசர் இப்படி வருத்தப் படலாமா? ஒரு மனைவி போனால், அந்தப்புரத்தில் வேறு மனைவிகள் இல்லையா? அவர் என்ன ராமபிரானா, ஒரே மனைவியுடன் வாழ?'' – அல்லி கேள்வி கேட்டுத் தூண்டினாள்.

பண்டம் விற்கும் அந்தப் பெண் கோபத்துடன், ''என்ன சொன்னாய்? நமது மகாராஜா மலையமான் மகளிடம் மிகுந்த அன்பும் பாசமும் கொண்டிருந்தார். சோழர் குலத்துக்கு வாரிசாக ஆண் குழந்தைகளைப் பெற்றெடுத்த பெருமை அவளுக்கு உண்டு. அதனால் மலையமான் மகள் இறந்த பிறகு மன்னர் அதிர்ச்சி அடைந்ததில் ஆச்சரியமில்லை'' என்றாள்.

அவள் கோபத்தை மாற்ற விரும்பிய அல்லி ''இரண்டு குழந்தைகளா? நீங்கள் அந்தக் குழந்தைகளைப் பார்த்திருக்கிறீர்களா? அந்தக் குழந்தைகளுக்கு யார் பாலூட்டி வளர்க்கிறார்கள்?'' என்று ஆவல் நிறைந்த குரலில் கேட்டாள்.

''குழந்தைகளைப் பார்க்க யாருக்கும் அனுமதி கிடையாது. பெரியபிராட்டி தனது மேற்பார்வையில் குழந்தைகளை வளர்க்கிறாள்'' என்றாள் அவள்.

''பெரியபிராட்டிக்குக் கண் தெரியவில்லை என்று சிலர் சொல்கிறார்களே?'' என்று கேட்டாள் அல்லி.

''இந்த வயது முதிர்ந்தபருவத்தில் அவர்கள் திடமுடன் வாழ்வது எங்களுக்கெல்லாம் ஆச்சரியமாயிருக்கிறது. கண் பார்வை மங்கவில்லை; நடை தளரவில்லை. கவனம் குறையவில்லை. ஆனால், தன் கண் எதிரே மாளிகையில் பல துக்ககரமான நிகழ்ச்சிகளைப் பார்க்கும் போது ஏற்படும் அதிர்ச்சி அவர்களுக்கு ஒருவேளை உடலில் தளர்ச்சியை ஏற்படுத்தலாம்'' என்றாள்.

அல்லியும் அந்தப் பெண்ணும் பிரியும் இடம் வந்துவிட்டது. பெரியபிராட்டி இருக்குமிடத்தை அவள் சுட்டிக் காட்டினாள்.

அல்லி தன் பசியை மறந்தாள். களைப்பை மறந்தாள். கருங் கோடையின் அனல் காற்றை மறந்தாள். பெரியபிராட்டி இருக்கும் மாளிகையை நோக்கி ஓடினாள்.

பெரியபிராட்டி வசிக்கும் இடம் தனித்திருந்தது; மூன்று அடுக்கு மாடங்கள் கொண்ட அந்த மாளிகை புதுச் சுண்ணம் பூசப்பட்டு, பொலிவிழந்து காணப்பட்டது. மாளிகை அருகே மரஞ்செடி கொடிகள் வளர்ந்திருந்தன.

மாளிகையின் கீழ்க் கூடத்தில் அவரவர்கள் தத்தம் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தனர். அல்லியை யார் என்று ஒருவரும் கேட்கவில்லை. அல்லி முதல் மாடம் ஏறினாள். சுற்றுமுற்றும் பார்த்தாள். குழந்தைகள் எங்கே இருக்கின்றன என்று தேடினாள். மூன்று நான்கு வயதுடைய சிறு குழந்தைகள் விளையாடிக் கொண்டிருந்தன. அவர்கள் அரச குமாரர்கள் அல்லர்.

அல்லி திகைத்து நின்று சுற்றுமுற்றும் பார்த்தாள். 'குழந்தைகள் எங்கே? பெரிய பிராட்டி எங்கே?' – ஒருவரையும் கேட்கத் துணியவில்லை அல்லி.

மூன்றாவது மாடத்துப் படிகளில் மெல்ல ஏறினாள். ஏதோ பேச்சுக் குரல் கேட்டது. யாரோ மெல்ல இருமும் ஓசை கேட்டது. தொடர்ந்து குழந்தையின் அழுகுரல். குழந்தை அழுதது. பிறகு தொடர்ந்து குரலை எழுப்பியது. கதறி அழுதது. யாரோ மெல்லச் சமாதானப் படுத்த முயலும் ஒலி கேட்டது.

அல்லி படிக்கட்டுகளில் தாவி ஏறிக் கூடத்துக்கு வந்து சேர்ந்தாள்.

கூடத்தின் ஓர் ஓரத்தே இருந்த மஞ்சத்தில் பெரிய பிராட்டியார் கையில் விசிறியுடன் அமர்ந்திருந்தாள். நடுக்கூடத்திலிருந்த தொட்டிலில் குழந்தை ஒன்று உறங்கிக் கொண்டிருந்தது.

மற்றொரு குழந்தை கீழே விரிக்கப்பட்டிருந்த பஞ்சணையில் வீரிட்டு அழுது கொண்டிருந்தது. பணிப்பெண் ஒருத்தி சங்கில் பாலை ஊற்றி அதற்குப் புகட்ட முயன்று கொண்டிருந்தாள். குழந்தையைச் சரியாக அணைத்து வைத்துக் கொள்ளக்கூட அவளுக்குத் தெரியவில்லை. குழந்தை அழுகையை நிறுத்தவில்லை.

அல்லி கண்டறியாதன கண்டவளைப் போல் முகத்தில் மகிழ்ச்சி பொங்க ஒரு கணம் நின்றாள். மறுகணம் ''என் செல்வங்களா!'' என்று கூவியவாறு குழந்தைகளிடம் ஓடினாள். தொட்டிலில் உறங்கும் குழந்தையைக் குனிந்து முத்தமிட்டாள். பிறகு கீழே கதறி அழும் குழந்தையைத் தாதியிடமிருந்து பெற்றுக்கொண்டாள். (தொடரும்)



# ரஸபங்கம்

ஸி. ராமமூர்த்தி

அண்ணாசாலையில் அமைந்திருந்த அரங்கை நோக்கிச் சென்ற அனைத்துப் பாதைகளிலும் மக்கள் கார், ஸ்கூட்டர், சைக்கிள், நடை என்று ஞாயிற்றுக் கிழமை காலை சாரி சாரியாகச் சென்று குவிந்தனர். சித்திரை வெய்யில் ஆனால் என்ன, போகிற வருகிற அசௌகரியம் ஆயின் என்ன, உயர்ந்த கட்டண விகிதம் என்றால்தான் என்ன என்று பாராது கிட்டத்தட்ட இரண்டாயிரம் பேர்கள் அங்கே குழுமினர். ஏன் குழும மாட்டார்கள்? ஆண்டிலேயே சிறந்ததென்று வர்ணிக்கப்படும் லாவண்யா ஆடை அணிவகுப்பும் மிஸ் லாவண்யா 1979 தேர்வும் இணைந்த விழாவுக்குக் கூட்டம் வருவதற்குக் கேட்பானேன்?

சென்னையிலிருந்து பதினைந்து மைல்கள் தென்மேற்கே இருந்த மத்திய அரசு ஊழியர்கள் குடியிருப்பின் வீடு ஒன்றிலிருந்து பலவேசம் மனைவி பரிமளத்துடன் விழாவுக்குக் கிளம்பி கொண்டிருந்தார்.

''பரிமளம்! 'டான்'னு பத்தரை மணிக்கு ஷோ ஆரம்பிச்சுடுவாங்க. மணி இப்பவே எட்டேகால். நீ சீக்கிரம் கிளம்பலேன்னா டிரெய்னிலே ஏறி அப்புறம் பஸ்ஸைப் பிடிச்சி நாம போறத்துக்கு முன்னாடி பாதி ஷோ முடிஞ்சிடும்'' என்று அவசரப்படுத்தினார்.

''முடிஞ்சா முடியட்டுங்க. அதுக்காகப் பொம்பளைங்க நாலு பேர் வர்ற இடத்துக்குச் சரியாப் புடவை நகை போடாமப் போக முடியுங்களா? ஒங்களுக்கு ஒண்ணும் இல்லே.. ஏதை வேணும்னு எடுத்துப் போட்டுக்குவீங்க. எங்க காரியம் நேரந்தான் ஆவும்,'' என்று பரிமளம் பதிலுக்கு இரைந்தாள். இருபத்திரண்டு ஆண்டுகள் தாம்பத்தியம், பத்தொன்பது வயதுப் பெண், பதினாறு வயதுப் பையன் ஆகியோரைப் பெற்று வளர்த்தது ஆகியவை தந்த உரிமையும் கண்டிப்பும் அவள் குரலில் ஓங்கி ஒலித்தன. அவற்றிற்கு ரொம்பவும் பழகிப் போன பலவேசம் சிவனே என்று வராந்தா ஈஸிச் சேரில் சாய்ந்து கொண்டு ''ஸண்டே ஸ்டாண்டர்டு'' இதழைப் படிக்க ஆரம்பித்தார். தாம் ஒரு காரியத்தில் உதவிய மாதவ மேனன் என்ற சினிமா மானேஜர் ஒருவர் கொடுத்து உதவிய இரண்டு ஐம்பது ரூபாய் டிக்கட்டுகளின் பயனை முழுதும் அனுபவிக்க வேண்டுமே என்ற தம் கவலையைத் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் படைபல வளர்ச்சி பற்றிய கட்டுரையைப் படிப்பதில் மறக்க முயன்றார்.

''டியர், என் பெட்டி ரெடியா?'' என்று கேட்டார் ஜேம்ஸ். அதில் தான் அவர் ஆஸாஹி காமிராக்களும் மாற்று லென்ஸுகளும் இருந்தன. அவர் உயிரும் கூட!

''காரிலே வைக்கச் சொல்லிரும் பையன் கிட்டே குடுத்து அனுப்பிட்டேங்க.''

''நீ வர்றியா? மேரி பாம்பேயிலிருந்து வந்திருக்கும் ஷோவைத்தான் கொஞ்ச நேரம் பாரேன்!''

மேரி நெற்றியில் ஊதா நிற பிளாஸ்டிக் பொட்டை ஒட்ட வைத்துக் கொண்டாள். ''நீங்க எடுக்கற ஃபோட்டோ எல்லாந்தான் பார்க்கப் போறேனே. நெறைய ஷோ பார்த்தாச்சுங்க. நீங்க போய்ட்டு வாங்க. நான் அதுக்குள்ளே பொன்ராஜ், ராஜேந்திரன் ரெண்டு பேரு வீட்டுக்கும் போயிட்டு வந்திடறேன். நாளைக்குக் காலேலே கிளம்பறமா, போன தரமே லில்லி அக்கா நான் வரலேன்னு கோவிச்சுக்கிடுச்சு!'' தன் முக அலங்காரத்தைச் சரி பார்த்துக் கொண்டாள் மேரி.

''ஏங்க, இந்தத் தரம் அந்த எஸ்த்தர் பொண்ணுக்குச் சான்ஸ் இருக்காமா?''

உறவினர்கள் மீதுள்ள ஈடுபாடு தம்மீது மேரிக்கு இல்லை என்று எண்ணினார் ஜேம்ஸ்.

எஸ்த்தர் மார்ட்டின் அவர்கள் நண்பர் வீட்டுப் பெண். 'மிஸ் பாம்பே'யாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட எஸ்தருக்குப் பத்தொன்பது வயது. உலகையே வெல்ல வேண்டும் என்று ஆசைக் கனவு காண்கிற, அழகான; படித்த, ஆனால் பண்பான பெண். அவள் அழகும் நண்பர்கள் உந்துதலும் இந்தப் போட்டி உலகில் அவளைத் தள்ளியிருந்தன.

''எஸ்த்தர் நன்னாத்தான் இருக்குது: வர்றவங்க மத்தவங்க எப்படியோ? எல்லாத் துக்கும் அதிர்ஷ்டம் வேணும்.''

''சரிங்க, நான் அவங்களைப் பார்த்துட்டு நேரா ஹோட்டலுக்கு வந்துடறேன். நீங் களும் ஷோ முடிஞ்சதும் இங்கே வந்துடுங்க.''

மேரி கிளம்பி விட்டாள். அவரும் புறப் பட்டார்.

**ப**ல நக்ஷத்திர அந்தஸ்துள்ள ஹோட்ட லில் தங்குவது எஸ்த்தருக்குப் புதுசு இல்லை. இரண்டு வருடங்களாக அழகுப் போட்டி களில், பங்கு கொண்டு அவள் ''மிஸ் ஸெவன்ட்டீன்,'' ''டீன் ப்ரின்ஸெஸ்'' போன்ற பட்டங்களை வென்றிருந்தாள். சிறிதும் பெரிதுமாகப் பல பரிசுகளும் பெற் றிருந்தாள். அவளைத் திரைப்பட வாய்ப்புக் களும் அழைத்தன. ஆனால் படிப்பு முக்கியம் என்று அதை முடிப்பதில் அக்கறையாக இருந்தாள். இப்போது ''மிஸ் பாம்பே'' எனத் தேர்ந்தெடுக்கப்பட்டு, மிஸ் லாவண்யா என்று இந்தியாவிலேயே 1979ன் மிக அழ கான பெண் என்று பட்டம் கிட்டும் வாய்ப் புடன் சென்னை வந்திருக்கிறாள்.

ஹோட்டலில் அவளுக்குத் தந்திருந்த இரட்டை அறையில் ஷோபனா ஸதாஷிவ் என்ற ''மிஸ் பெங்களூரு''க்கும் இடம் தந் திருந்தார்கள். ஷோபனா நடுத்தரத்துக்குக் குறைவான உயரம். அவளுடைய மாநிறத் துக்கும் ஒடிசலான தேகத்துக்கும் அகில இந்திய அளவில் கிடைக்கும் மார்க்கை விடக் தன் பொன் நிறத்துக்கும் திரட்சிக்கும் நிச் சயம் கூட மார்க் கிடைக்கும் என்று எஸ்த்தர் எண்ணிக் கொண்டாள். ஷோபனா தனக்குள் என்ன எண்ணிக் கொண்டாளோ, அறைத் துணையான எஸ்த்தருடன் நட்புடனே இனிமையாகப் பழகினாள்.

இருவரும் அறையைப் பூட்டிக் கொண்டு காலை 8.30 மணிக்கெல்லாம் அரங்குக்கு மற்றப் போட்டியாளர்களையும் மாடல்களையும் அழைத்துச் செல்லும் இரண்டு பஸ்களில் ஒன்றில் ஏறிக் கொண்டனர்.

**ர**ம்யாவுக்கு இந்த ஃபாஷன் ஷோவுக்குப் போவதில் விருப்பமே இல்லை. ஆனால் கடமை என்று ஒன்று இயல்பான விருப்பு வெறுப்பு களின் அரசாட்சிக்கு இடம் தரவில்லை. ரம்யாவின் கணவன் ரகுராம் பெயரும் புக மும் படைத்த ஒரு மாஸ்டர் ஆஃப் ஸெரி மனீஸ்!'' இது போன்ற அலங்கார அணி வகுப்பு, அழகுப் போட்டி, புதிய உடைகள் மோஸ்தர்கள் வெளியிட்டு விழாக்கள் ஆகிய வற்றில் அவனுடைய வேடிக்கையான பேச் சும், தமாஷ்களும் துணுக்குகளும் உடனுரை யாக அமையா விட்டால் அவற்றின் வெற்றி முழுமை அடையாது என்று ஒரு கியாதி அவ னுக்கு. ரகுராம் ஓர் அட்வர்டைஸிங் ஏஜென் ஸியில் வேலை பார்த்து வந்தான். இப்போது பாஷன் துறையில் ஏற்பட்ட புகழ் அவன் அலுவலக வேலைக்கு உதவியது.

கணவனுக்குப் புகழும் செல்வாக்கும் ஏற் படும் நிகழ்ச்சிகளில் மனைவி ரம்யாவும் கலந்து கொள்ள வேண்டிய நிர்ப்பந்தம்!

அகில இந்திய ரீதியில் அழகிப் போட்டி நடப்பதால் அவளை வரும்படி அழைத்தான்.

அவளுக்கென்று ஒரு குழந்தை மட்டும் இருந்திருந்தால் அதனுடன் இந்த ஞாயிற்றுக் கிழமைப் பொழுதை இன்பமாகக் கழிக்க லாம். ஷோவுக்கு ரகுவுடன் போய்த் தொலைய வேண்டியதில்லை என்று விரக்தியாக அவள் எண்ணமிட்டது அவள் முகத்தில் காட்டியது.

''ஸாரி ரமி, நீ கோபமாக இருக்கிறாய். நான் ஒன்றும் சொல்லப் போவதில்லை இனி மேல். சீக்கிரம் ரெடி ஆகு. கிளம்பலாம்.''

''ஆனால் நான் ஒன்று சொல்ல வேண்டும். என் கோரிக்கை இது என்று வைத்துக் கொள் ளுங்கள். ஜோக் என்பதற்காக ரொம்ப அளவு கடந்து 'ஸெக்ஸி' யாக வர்ணனை





பண்ணுதீர்கள். அது நம் மதிப்புக்கு உகந்ததல்ல!''

லாவண்யா மில்ஸ் நிதித்துறை டைரக்டர் பாலதேவ் தமக்குப் பதினைந்து வயது இளைய நளினியைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டிருந்தார். அவள் பதினெட்டு வயது முதல் இருபது வரை பம்பாய் சினிமாக் கோட்டையை முற்றுகையிட்டு வெல்லாமல் போனவள். நல்ல அழகு இருந்தாலும் அவளுக்குத் திரைப்படங்களில் நடிக்கும் வாய்ப்பு ஏனோ வரவில்லை. பிறகு நளினி ஒரு பிரபல ஹோட்டலில் ரிஸப்ஷனிஸ்ட் வேலையில் சேர்ந்தாள். திறம்பட வேலை செய்தாள். வருகிறவர்களைப் புன்சிரிப்புடன் வரவேற்று உபசரித்து நல்ல பெயர் வாங்கிக் கொண்டாள். அவள் அழகிலும் மென்மையான பண்பிலும் மனத்தைப் பறி கொடுத்தார் பாலதேவ். திருமணம் ஆகி ஏழு ஆண்டுகளில் மூன்று மணியான குழந்தைகள் அவர்களுக்குப் பிறந்தன.

இந்த ஆண்டு சென்னைப் போட்டியில் ''மிஸஸ் 1979'' என்று ஒரு புதிய அம்சத்தை லாவண்யா நிறுவனத்தினர் சேர்த்திருந்தனர். வயது வரம்பு ஏதும் இன்றித் திருமணம் ஆன பெண்களிடையே மிக அழகான மாதைத் தேர்ந்தெடுக்கும் அந்த நிகழ்ச்சியில் பங்கேற்கும்படி நளினியை பாலதேவ் வற்புறுத்தியிருந்தார். அவளும் முதலில் வேண்டாம் என்று தயங்கினாலும் பிறகு கலந்து கொள்ளத் தீர்மானித்தாள்.

சரியாகப் பத்தரை மணிக்குப் ஃபாஷன் ஷோ துவங்கியது. லாவண்யா நிறுவனத்தின் பொதுமக்கள் தொடர்பு அதிகாரி ஸையத் அலி அனைவரையும் வரவேற்றார். நிகழ்ச்சிகளைச் சுருக்கமாகக் குறிப்பிட்டார். ''இனி நீங்கள் விரும்பி வரவேற்கும் உடனுரையாளர் ரகுராமிடம் மைக்கைத் தருகிறேன். இதோ துவங்குகிறது அழகின் பவனி!'' என்றார்.

ரகுராம் உற்சாகத்துடன் வர்ணனை செய்தான். வாயைப் பிளந்து கொண்டு அழகு அணிவகுப்பைப் பார்த்துக் கொண்டிருந்தவர்களை அவன் சீண்டினான். கடிந்தான். பரிகசித்தான். அவன் பயன்படுத்திய வார்த்தைகளோ அவர்கள் லயிப்பையும் இன்ப ரஸ உணர்வையும் தூண்டி விட்டு அதிகம் ஆக்கின.

''இதோ வருகிறாள் சிற்பி வடித்தெடுத்த சௌந்தர்யச் சிலை சரேகா. அவள் உடுத்தியிருப்பது ராஜஸ்தானத்து காக்ரா பாணி உடை. அப்படி ஒரேயடியாய் அவளைப் பார்த்துப் பெருமூச்சு விடாதீர்கள். அரங்கில் உஷ்ணம் அதிகமாகி ஏர்-கண்டிஷனிங் கெட்டுவிடும். ராஜஸ்தான் சமாசாரம் ஆயிற்றே. உஷ்ணத்துக்குக் கேட்க வேண்டுமா?''

ரகுராமுக்கு இந்தப் பெரிய ஜனசமுத்திரத்தைத் தன் இஷ்டப்படி ஆட்டும் திறன் தனக்கு இருப்பது வியப்பாகவும் அதேசமயம் உள்ள நிறைவாகவும் இருந்தது. வலப்புறம் மூன்றாவது வரிசையில் அசுவாரசியமாக உட்கார்ந்திருந்த மனைவி ரமியை அவன் மறந்தே போனான். அவள் காலையில் சொன்ன மொழிகளை வீட்டிலேயே அர்த்தமில்லாதவை என்று எண்ணியிருந்தான். இப்போது கூட்டத்தை மந்திரச் சொற்களால் கட்டுவது போல இருந்த அவனுக்கு அவை நினைவிலும் இல்லை.

ராஜும் நீருவும் நிகழ்ச்சியை மிகவும் ரசித்தார்கள். மேடை மீது உலவிய பெண்களைப் பற்றி ராஜ் சொன்னவற்றைக் கேட்டுப் பொறுமை கொள்வதைப் போல அவள் நடித்தாளே தவிர அவளுக்குத் தன்னைப் பற்றிப் பயம் இல்லை.

ஆடை அலங்கார அணிவகுப்புக்குப் பின் ''மிஸஸ் 1979 போட்டியில் ஏழு பேர் கலந்து கொண்ட நிகழ்ச்சி வந்த போது தான் அவளுக்கு அலுப்பு ஏற்பட்டது.

''ராஜ், இது மடத்தனமானது, ஸ்டியூப்பிட்'' என்றாள் நீரு.

''நோ டார்லிங், மிஸ் எய்ட்டீன் போல மிஸ் எய்ட்டியையும் வெளிநாடுகளில் தேர்ந்தெடுக்கிறார்கள். அழகு காலம் கடந்தது.''

''கவிதை வாக்கு அப்படி இருக்கலாம். ஆனால் மனித உடலைப் பொறுத்த வரை வயதும் மூப்பும் இல்லை என்பது ஒரு கண் துடைப்பு, ஹிப்பாக்கிரஸி. வயதானவர்கள், குழந்தைகளைப் பெற்றவர்கள், தளர்ந்தவர்கள், சோர்ந்தவர்கள் இந்த மாதிரிப் பெண்களுக்கு ஏன் இப்படி வயது கடந்த ஆசை? ஐ பிட்டி தெம், ஐ பிட்டி மோஸ்ட் த வின்னர், இந்தக் குண்டுத் தோற்றத்தில் தொப்புள் தெரிய லோஹிப்பு அஜந்தாக் கொண்டையும் ரத்தக் காயம் மாதிரி லிப்ஸ்டிக்கும் — சேச்சே, இட் இஸ் வல்கர், ரியலி'' என்று வெறுத்தே சொன்னாள் நிருபமா.

நளினி பாலதேவுக்கு ஒரே பெருமை தான். அவள் கணவர் அவளைப் போட்டியில் சேரச் சொன்ன போதே அவள் வெற்றியையும் நிச்சயம் பண்ணியிருந்தது அவளுக்குத் தெரியாது. ஸையத் அலி மூலம் தேர்ந்தெடுக்கும் நீதிபதிகளைச் சரிக்கட்டியிருந்தார் அவர். நீதிபதி பதவி கிடைப்பதே இந்த பெத்தனையையும் பொறுத்து இருந்தது.

''ஃபேஷன் டிஸைன் புடவை வாங்கிட்டுப் போன இந்த அம்மா, மீண்டும் அந்தப் புடவையை எடுத்திட்டு ஓடி வர்றாங்களே! என்னவாம்?''

''இரண்டு நிமிஷத்துக்குள் ஃபேஷன் மாறிட்டதாம்! வேறு புடவை கேட்கிறாங்க!''



# கமகமணம் வீசும் கோகுல்!

பரத நாட்டியம் போல் நிகரற்றது
கோகுல் பவுடர். தென்னாட்டுக் கலாச்
சார மணம் கமழுவது. மென்மையான
தூய சந்தனம், சிறப்பு மூலிகைகள்
மற்றும் பல வாசனை திரவியங்கள்
கொண்டது.

கோகுல் ஸாண்டல்வுட் பவுடர் கோடை
வெப்பத்திலிருந்து முகத்தைக்
கருக்காமல் பாதுகாக்கிறது.

கோகுல் ஸான்டால் நாள் முழுவதும்
சந்தன மணத்தில் உங்களை
மகிழ வைக்கிறது.

**கோகுல் பவுடர் பூசுங்கள் —
வசந்த மலரெனத் திகழுங்கள்!**

## கோகுல்

ஸாண்டல்வுட் &
ஸான்டால்
பவுடர்



டி.எஸ்.ஆர். & கம்பெனி,
சென்னை.




ADWAVE/TSR/1019

தமிழ் புத்தக வரலாற்றில்
முதன் முறையாக ஃபாஷனுக்குச்
சிறப்பிதழ் வெளியிடும் கல்கிக்கு
எங்கள் வாழ்த்துக்கள் !



## ஆண்களுக்கு
## தையற்கலை வகுப்பு

வேலை வாய்ப்புள்ள ஒரே தொழிலான தையற் கலையை செய்முறை பயிற்சியுடன் 6 / 12 மாதங்களில் ஓய்வு நேரத்தில் பயின்று டிப்ளமோ பெற, அரசாங்க பரீட்சை எழுத, தொழில் நடத்த ஆண்களுக்கு அரிய வாய்ப்பு. ஷிப்டில் உள்ளவர்களுக்கு வசதியான வகுப்பும். தையல் கலைஞர்களுக்கு தனி சிறப்பு பயிற்சி வகுப்பும் 3 மாத 130K ஜிக்ஜாக் மிஷின் எம்பிராய்டரி வகுப்பும் உண்டு.

**புதிய வகுப்பு 16-6-79 முதல்
ஆரம்பமாகிறது.**

சனி, ஞாயிறு இரு தினங்கள் தஞ்சை மிறும், சேலத்திலும் தையல் கலைஞர்களுக்கு தனி சிறப்பு நேர்முக வகுப்புகள் ஆரம்பமாகிறது.

விபரங்களுக்கு :

## சாஸ்திரீய தையல் கல்லூரி
(Regd.)
(ஐஸ் ஹவுஸ் போலீஸ் ஸ்டேஷன் அருகில்)
**50, வாயிட்ஸ் காலனி,
சென்னை - 600 014**

முதல்வர் :
**ஆர். இ. எஸ். ரவீந்திரன்,
G.C.T., C.T.C., M.D., G.M.T.C., N.S.D.D.**

–MINERVA



இப்போது ஏராளமாக
விற்பனையாகிறது

# சரவணா

## மாவரைக்கும் இயந்திரம்



- நீடித்த உழைப்பு
- நிசப்தமான ஓட்டம்
- கவர்ச்சியான தோற்றம்
- முழு பாதுகாப்பான கவரிங்

## சரவணா.
## இன்ஜினியரிங் டிரேடர்ஸ்
*(சிந்தாமணி சூப்பர் மார்க்கெட் சமீபம்)*
12/15-A கிருஷ்ணசாமி முதலியார் ரோடு
கோயமுத்தூர் 641002
PHONE : 34250 • 32321
GRAMS 'WETGRINDER' –OSR



**ராஜாஜியின் நூற்றாண்டு விழாவினை
ஒட்டி மாதவி பதிப்பகம் செலுத்திடும்
நூல் அஞ்சலி**

**பி. சி. கணேசன்**
தொகுத்து அளிக்கும்
**ராஜாஜியின் கருத்துக்கள்
விலை ரூபாய் 5**

பல்வேறு பிரச்சினைகள் குறித்து ராஜாஜி வெளியிட்டுள்ள கருத்துக்கள் தொகுத்து அளிக்கப்பட்டுள்ளன. ராஜாஜியின் தத்துவங்களைப் புரிந்து கொள்வதற்கு சிறந்த நூல். புத்தகத்தை பதிவுத் தபாலில் பெற விரும்புவோர் புத்தக விலையுடன் ஒரு ரூபாய் சேர்த்து மணியார்டர் செய்யவும்.

**மாதவி பதிப்பகம்**
192, ராயப்பேட்டை நெடுஞ்சாலை,
மயிலாப்பூர், சென்னை - 600004.

அதை ஏற முடியாத குன்றாக நினைக்கவும் இல்லை அவர்கள்.

விதிகளில் குறிப்பிட்ட மூன்றுவித உடைகளில் முன்னேற்ற கட்டத்தில் ஒன்பது நகரங்களில் வெற்றி பெற்று வந்த அந்த அணங்குகள் முறையாகப் பவனி வந்தனர், அழகு நடை பயின்றனர். நீதிபதிகள் கேட்ட கேள்விகளுக்குப் பதில்கள் தந்து உரையாடியாடினர், விளக்கொளியில் மின்னினர். ரகுராமின் வர்ணனையில் கட்டுச் சுடர் விட்டு அவையை ஆரவார மயக்கத்தில் ஆழ்த்தினர். ரம்யா ரகுவின் ஒவ்வொரு உற்சாகமான வர்ணனையிலும் கூசிக் குறுகினாள். ஏதோ ஓர் இங்கித உணர்வுதான் அவளை அங்கிருந்து நடுவில் எழுந்து போகாமல் இருக்கச் செய்தது.

''மிஸ் லாவண்யா 1979'' ஆக, மிஸ் டெல்லி பட்டம் பெற்ற நர்மதா ஸுஜன்சிங் என்ற பத்தொன்பது வயது மருத்துவக் கல்லூரி மாணவி தேர்ந்தெடுக்கப்பட்டாள். மிஸ் கல்கத்தாவுக்கு இரண்டாவது இடமும் எஸ்த்தருக்கு மூன்றாவதும் ஷோபனாவுக்கு ஆறுதல் பரிசும் கிடைத்தன.

அமைச்சர் நர்மதாவுக்குக் கிரீடத்தைச் சூட்டினார். அவள் கையைப் பிடித்துக் குலுக்கினார். பரிசுச் 'செக்'கை வழங்கினார். பிறகு வேடிக்கையாக அனைவருடனும் சிரித்துப் பேசி அளவளாவினார், கைகுலுக்கி விடை பெற்றார்.

நன்றி நவிலல் நடந்தது. தேசிய கீதம் இசைக்கப் பட்டது. அவையோர் கலைந்து செல்லத் துவங்கினர்.

அரங்கத்தில் போட்டியாளர்கள், நீதிபதிகள், மாடல்களாக வந்தவர்கள், நிர்வாகிகள் எல்லோரும் இன்னும் நின்று பேசிக் கொண்டிருந்தனர். ரகுராம் இந்த வாய்ப்பையும் விடவில்லை. அவன் வர்ணனையைப் பல பெண்கள் வெகுவாகப் புகழ்ந்து பாராட்டினர். அவன் கவர்ச்சியான தோற்றமும் எடுப்பான உடையும் பேச்சு சாமர்த்தியமும் இணைந்து அவனை ஓர் ஆதர்ச புருஷனாக அவர்களுக்குக் காட்டின. ரகுராமிடமிருந்து அவன் விலாசமிட்ட கார்டுகளை ஆர்வத்துடன் பலர் பெற்றுக் கொண்டார்கள். தம் விலாசச் சீட்டுகளைப் பதிலாகத் தந்தார்கள்.

''மிஸ்டர் ரகுராம், யூ மஸ்ட் கம் அண்ட் விஸிட் மீ இன் கல்கட்டா!'' என்று இரண்டாவது பரிசு பெற்ற கனத்தினி போஸ் அவனிடம் விஷமமாகச் சொன்னாள்.

''ஒய் நாட் ஹியர் இட்ஸெல்ஃப் இன் யுவர் ஹோட்டேல்?'' என்று அவனும் விஷமமாகக் கேட்டான்.

கனத்தினியும் விடவில்லை. ''யெஸ், ஒய் நாட்?'' என்றாளே துணிந்து.

''ஹீ கான்னாட். பிக்காஸ் ஐ ஆம் ஹிஸ் ஒய்ஃப் அண்ட் இஸ் கோயிங் ஹோம் வித் மீ!'' என்று சொல்லி, ரகுராமின் அருகில் வந்து நின்றாள் ரம்யா.

**வீ**டு போய்ச் சேரும் வரையில் காரில் ரம்யா மௌனமாகவே வந்தாள். வீட்டுக்கு உள்ளே வந்ததும் வெடித்தாள்.

''எத்தனை சொன்னாலும் நீங்கள் கேட்பதில்லை. இப்படி யெல்லாம் பேசுவதும் கண்ட



''உங்க பெண்ணுக்கு மாப்பிள்ளை கிடைச்சுட்டானுமே? மாப்பிள்ளைக்கு என்ன வேலை?''

''ஏதோ''அன்எம்ப்ளாய்டா''இருக்கிறதாச் சொன்னாங்க.என்ன வேலைன்னு தெரியலே. எதுவானால் என்ன? சரின்னு சொல்லி முடிவு செய்துட்டேன்...!''

---

பெண்களுடன் இங்கிதமின்றிப் பழகுவதும் உங்களுக்கே ரசாபாசமாக விரசமாக இல்லை, ரகு?''

அவன் சும்மா இருந்திருக்க வேண்டும்: ''ரமி, யூ ஆர் ஜஸ்ட் ஜெலஸ்!'' என்றான்.

அவள் அவனை ஏறிட்டுப் பார்த்தாள். நிறுத்தி நிதானமாக அளந்து வந்தன அவள் சொற்கள்:

''ரகு, யூ நோ இட். ஐ ஆம் நாட் ஜெலஸ். இந்த விவகாரத்தில் இருக்கிற விரஸம், விகாரம், அப்ஸீனிட்டி எல்லாமே நான் பொறுமைப்படக் காரணமே இல்லாததனால்தான்! பிற பெண்களை அளவெடுக்க நீங்கள் தையல்காராக ஆசைப்படுவதும், முகட்டின் மீது முகிலை வர்ணிப்பதும் அவர்கள் அணிந்திருக்கும் ஆடை மீது பொறுமைப் படுவதாகக் கூறுவதும் ஹோட்டல் அறையில் எவளையோ சந்திக்க வருகிறேன் என்பதும் — இவை எல்லாம் என்னைத் துன்புறுத்தும், பொறுமை கொள்ளச் செய்யும். எப்போது தெரியுமா? நீங்கள் எனக்கென்று ஒரு குழந்தையை இந்த ஏழு ஆண்டுகள் தாம்பத்தியத்தில் தந்திருந்தால், உங்களால் தர முடிந்திருந்தால் — அதை விடுவோம், கண்ட பெண்களிடமெல்லாம் பூடகமாகப் பேசி உணர்த்துகிறீர்களே, அந்தக் கிளர்ச்சியை எல்லாம் கட்டிய மனைவியான எனக்கு உண்மையிலேயே நீங்கள் தர முடிந்திருந்தால். அந்தத் திறன் உங்களிடம் இல்லை, ரகு. அது இல்லாத போது, அந்த இல்லாமை உங்களுக்குத் தெரிந்தும் உள்ள போது, இப்படியெல்லாம் நீங்கள் பேசுவதும் நடப்பதும் முழுப்பொய். எனவே விரசம், விகாரம், அசிங்கம்! *It is obscene because It is a total lie!* ஐ ஆம் ஸாரி ரகு. இனி மேலாகிலும் இது வேண்டாம்.''

அவன் அமைதியானான். அவனுக்கு நெஞ்சினுள் ஒன்று, கோபமோ துயரமோ பீறிட்டு எழுந்தது. கண்களில் நீர் முட்டியது.

ஆனால் அவள் அழுகையையும் கடந்த நிலையில் இருந்தாள். அவர்களிடையே பகிர்ந்து கொள்ள அது கூட இல்லை இப்போது.

கன்ஸ்யூமர் கவுன்ஸில் ஆஃப் இந்தியா
வின் மகத்தான கண்டுபிடிப்பு:

மூலிகைச் செடிகளின் உதவியால்
மட்டுமே உங்கள் பற்களை நோய்
களிலிருந்து காப்பாற்ற முடியும்

# ஒரே நீம் டூத்பேஸ்ட்

## இதில் மட்டும் தான் நீம் விதையின் குணமும் மணமும் அமைந்துள்ளது

பல் டாக்டர்களின் சர்வேயின் படி பார்த்ததில் புகழ்பெற்ற டூத் பேஸ்ட்டுகள் யாவுமே பற்களை வெண்மையாக மட்டும் வைத்துக் கொள்கிறது. பல் நோய்கள் வராமல் இது காப்ப தில்லை. நோய் வராமல் தடுக்கவல்ல மூலிகையின் குணம் இப்பொழுது வரும் டூத் பேஸ்டுகளில் இல்லாதது தான் இதன் காரணம். ஆனால் நீம் டூத் பேஸ்ட் இயற்கையின் குணம் கொண்டிருக்கிறது நீம் டூத் பேஸட் நீம் விதையின் எண்ணை கொண்டு தயாரிக்கப்படுவதால் இது பற்களை வெண்மையாக வைத்துக் கொள்வதோடு மட்டுமல்லாமல் நோய்கள் உங்கள் பற்களை நெருங்க விடாமல் பாதுகாக்கிறது.




வேண்டுகோளின் போல்
இதர விபரம்

பற்களை வெண்மையாக
வும் ஆரோக்கியத்துடனும்
வைத்துக் கொள்ள தவ
றாமல் உபயோகியுங்கள்—
நீம் டூத் பேஸ்ட்

கல்கத்தா கெமிக்கலின் ஒரு தயாரிப்பு

IDL/NTN 2T



# மாடல் நட்சத்திரம்

“நான் ஏழு வருடங்களுக்கு மேலாக மாடலிங் செய்து வருகிறேன். சினிமாவில் நடித்ததால் இன்று ரதி அக்னி ஹோத்ரி என்ற பெயர் எல்லாருக்கும் தெரிந்ததாக இருக்கலாம். ஆனால் என்னைவிட என் சகோதரி அனிதா அக்னிஹோத்ரியைத்தான் எல்லாருக்கும் நன்கு தெரியும். அந்த அளவுக்கு மாடலிங் கலையில் அவர் புகழ் பெற்றிருந்தார். அவர் வழியில்தான் நான் மாடலிங் கலையைத் தொடர்ந்தேன்.''

''மாடலிங்கில் இருந்த நீங்கள் திரைப் படத்தில் பிரவேசித்த விதம்?''

''எதிர்பாராதது. திடீரென்று ஒருநாள் எங்களது இல்லத்திற்கு வந்தார் டைரக்டர் பாரதிராஜா. 'நடிக்க விருப்பமா?' என்று கேட்டார். நான் மதில் மேலிருக்கும் பூனையானேன். என் தந்தையாருடன் கலந்து பேசி அவர் சம்மதித்ததன் பேரில் நான் ஒப்பந்தமானேன். பிறகுதான் எனக்குத் தெரிந்தது, டைரக்டர் பாரதிராஜா புகைப்படக்காரர் ஒருவரிடம் என் புகைப்படத்தைப் பார்த்துவிட்டுத்தான் எங்கள் வீட்டிற்கு வந்தார் என்று.''

''மாடலிங் முறைக்கும் நடிப்பிற்கும் எந்த வகையில் நீங்கள் வித்தியாசங்களைக் காண்கிறீர்கள்?''

''அழகாக உடை உடுத்தி, அனுசரணையாக நடை பயின்று முகத்தில் சிரிப்பை வரவழைத்து நடப்பதுதான் மாடலிங். இந்தத் துறைக்கு மிக முக்கியமான தேவை மூன்று தான். ஒன்று அழகான முகம், இரண்டு சிறந்த உடல் கட்டு, மூன்று எப்பொழுதும் சிரித்த முகம். இவையல்லாமல் உணர்ச்சிகளை முகத்தில் தேக்கவோ உள் உணர்வுகளைக் காட்டவோ வழியுமில்லை, அதற்கு அவசியமுமில்லை. ஆனால் மாடலிங்கில் எதெது தேவையில்லையோ அதெல்லாமும் நடிப்புத் துறைக்கு அத்யாவசியத் தேவைகளாக இருக்கின்றன.''

''மாடலிங், நடிப்புக்கு உதவுகிறதா?''

''பெரிதாக உதவவில்லை என்றாலும் உதவத்தான் செய்கிறது. மேக்கப் நடிப்புக் கலைக்கு மட்டுமல்ல, மாடலிங் கலையிலும் முக்கிய பங்கு வகிக்கிறது. ஒரு மேக்கப் மேன் வந்து செய்ய வேண்டிய காரியங்களை அவர் இல்லாமலேயே மாடலிங் செய்யும் பெண்கள் தங்களுக்குத் தாங்களே செய்து கொள்வார்கள். நாங்கள் பல வகையான உடைகளில் தோன்றுவதால் எங்களுக்கு எந்த உடைகள் போட்டால் சிறப்பாக இருக்குமென்று நன்றாகவே தெரியும். அதேபோல் மிகுதியான புகைப்படங்களிலும், விளம்பரங்களிலும் தோன்றுவதால் எங்களது முகம் எந்த கோணத்தில் கேமராவில் எடுக்கப்பட்டால் நன்றாக இருக்கும் என்பதை ஓரளவுக்குத் தெரிந்து கொள்ளவும் முடிகிறது. இவ்வளவும் தெரிந்து வைத்திருப்பது நடிப்புக்குப் பக்கபலம் தானே!''

பேட்டி: **ருக்மிணி ராமச்சந்திரன்**

அமெரிக்காவைச் சேர்ந்த லினஸ் கார்ல் பாலிங் என்பவருக்கு மட்டும் தான் உலகிலேயே இது வரை இரண்டு தடவை நோபல் பரிசு கிடைத்துள்ளது. 1954-ல் ரசாயனத்துக்கும் 1962ல் அமைதிப் பணிக்கும் இவருக்கு நோபல் பரிசு கிடைத்துள்ளது. வேறு யாரும் இதுவரை ஒரு தடவைக்கு அதிகமாக நோபல் பரிசு பெற்றது கிடையாது. எஸ். எஸ். மணி.

---





# மும்முனைகள்

## கி.ராஜேந்திரன்

### அத்தியாயம் 34

தமது வீட்டின் வரவேற்பு அறையில் மெல்லக் குறுக்கும் நெடுக்கும் நடந்தபடி சுப்பிரமண்ய புஜங்க ஸ்தோத்திரத்தை அன்று பத்தாவது தடவையாகச் சொல்லிக் கொண்டிருந்த வைத்தியலிங்கம் வாசலில் நடமாட்டம் உணர்ந்து திரும்பினார்: ''வாப்பா தீபக் வா!'' என்று அழைத்தார்.

''இந்த சுலோகத்துக்கு என்ன அர்த்தம் தெரியுமா?'' என்று வினவியவர் அவன் பதிலுக்குக் காத்திராமல் சொல்றேன் கேட்டுக்க'' என்று கூறி விட்டுத் தொடர்ந்தார்:

''தெய்வ யானையின் நாதனே! தன் மகனுடைய குற்றங்களைப் பெற்ற தாயும் தந்தையும் மன்னிப்பதில்லையா? நீ அண்ட சராசரம் அனைத்துக்கும் தகப்பனாயிற்றே. நான் உனக்குக் குழந்தைதானே? என்னுடைய குற்றங்களை யெல்லாம் மன்னித்துவிடு பிரபுவே!''

''ரொம்ப அழகான கருத்து ஸார்!'' என்றான் தீபக்.

''கருத்து அழகாத்தான் இருக்கு. ஒப்புக் கொள்றேன். ஆனா ஒருதரம் இரண்டுதரம் மன்னிக்கலாம். மன்னிக்க மன்னிக்க மேலே மேலே தவறு செய்துக்கிட்டுப் போறவனை எந்த அப்பா பொறுத்துக் கொள்ள முடியும்? முருகனும் கூடப் பொறுமை இழந்து வேலை உயர்த்துவிறது உண்டுதானே? அந்த மாதிரி தான் எனக்குச் சத்யா பேரிலே கோபம்!''

''அதற்கு நானும் ஒரு காரணம் ஸார்!'' என்றான் தீபக். ''உதவாக் கரை, குட் ஃபார் நத்திங், இடியட் மாதிரி நடந்துக் கிட்டேன் நான். நீங்க சொன்னதைக்



கேட்காமல் ஏதோ தன்மானம் கௌரவம் அது இதுன்னு நினைச்சுக்கிட்டு இருந்துட்டேன். அதனாலே ஒரு உத்தமமான நண்பன் கெட்டுக் குட்டிச் சுவராவதைப் பார்த்து இப்பப் பரிதாபப் படறேன். என்னை நானே நொந்துக்கறேன். நீங்க சொன்னதுபோல சத்யா பின்னாடியே நான் இருந்திருந்தால் அவன் கெட்ட சகவாசத்தால் வீணாகாமல் நான் காப்பாற்றியிருக்க முடியும். இந்தத் தீபக்கைப் போல ஒரு ஸ்டுபிட் ஃபெலோ எங்கேயாவது உண்டா சார்!!'' என்று மெய்யான வருத்தம் தொனிக்கத் தன்னைத்தானே குறை கூறிக் கொண்டான் தீபக் பால்.

''நீ என்ன பண்ணுவே பாவம்?'' என்று அவன் நிலையைப் புரிந்து கொண்டவராகப் பேசினார் வைத்தியலிங்கம். ''என் மகளைக் காதலிக்கும் போது என் கம்பெனியிலேயே வேலை பார்க்க உன் மனசு எப்படி இடம் கொடுக்கும்? நிர்வாகத்திலே ஆதிக்கம் செலுத்தறதுக்காகவே முதலாளி மகளை மயக்கிட்டான்னு யாராவது சொல்லப் போறாங்களேன்னு உனக்குக் கவலை! அதனால்தானே நான் எவ்வளவு கேட்டுக்கிட்டும் அகிலினி என்டர்பிரைஸஸ்ஸில் சேர நீ மறுத்துட்டே?''

''அப்பா ஆர் யூ எ மைண்ட் ரீடர்?'' என்று கேட்டாள் சுலோசனா.

''அப்கோர்ஸ்!'' என்றார் வைத்தியலிங்கம். ''இப்போ உன் மனசுலே என்ன இருக்கு சொல்லட்டுமா?''

''சொல்லுங்க பார்ப்போம்!''

''என்ன தீபக் ஆட்சேபணை இல்லையே?'' என்று கேட்டார் வைத்தியலிங்கம்.

''முன்பு ஒருநாள் பயந்த மாதிரி இப்பப் பயப்பட மாட்டேன் சார்! இப்பத்தான் நான் உங்களில் ஒருவனாக ஆகி விட்டேனே!'' என்றான் தீபக்.

''அப்படின்னா சரி, இப்ப சுலோசனா மனசிலே உறுத்திக்கிட்டிருக்கிற ஒரு முக்கியமான கேள்வி, அவ கேட்கப் பயந்துக்கிட்டே இருக்கிற ஒரு கேள்வி என்னன்னு சொல்றேன்!''

''என்னப்பா?''

''இந்த அப்பா நம் அண்ணன் சத்யாவைத் தன் சொந்த மகன் இல்லை. வளர்ப்பு மகன் தான்னு சொல்லிட்டாரே—நம்ம கேஸ் என்ன? நாமும் ஒருவேளை வளர்ப்புப் பெண் தானோ?...''

சுலோசனா ஓடி வந்து அப்பாவின் காலடியில் விழுந்து கட்டிக் கொண்டாள். ''வேண்டாம்ப்பா! அதைச் சொல்லாதீங்க. என்னால் சகிக்கவே முடியாது. தாங்கிக்கவே முடியாது!'' என்று கதறினாள்.

தனபாக்கியம் சுலோசனாவை அள்ளி எடுத்து அணைத்துக் கண்ணீரைத் துடைத்தாள். ''சீ அசடே! நீ என் வயிற்றில் உருவானவதாண்டி! ஒன்பது மாதம் நான் சுமந்து பெற்றெடுத்த குழந்தைதான் நீ'' என்றாள்.

''பாவம்! இப்படி ஒரு வேதனை, சந்தேகம், பயம் உன் உள்ளத்தில் ஏற்பட்டிருக்க முடியும் என்று கூட எனக்குத்



தெரியலே பாரேன்! அதையும் உன் அப்பா தான் சாமர்த்தியமா ஊகித்து உடைச்சு விட வேண்டியிருக்கு!''

''உன் அம்மா சொன்னது சத்யம் கலோ!'' என்ருர் வைத்தியலிங்கம். ''எங்களே நம்பு. உன் அண்ணுவை ஓர் அனுதை ஆசிர மத்திலிருந்து நான் கொண்டு வருவதற்கு முன் எங்களுக்கு ஐந்து வருஷங்களாகக் குழந் தையே பிறக்கலே. என்னேப் பரிசோதித்துப் பார்த்த டாக்டர் நம்பிக்கையோடு பேசலே. அப்புறம்தான் சத்யாவைத் தத்து எடுத்துக் கிட்டோம். ஆனுலும் உன் அம்மா தன் வயிறு திறக்கணும்னு பிரார்த்திச்சுக்கிட்டே இருந்தா. இரண்டு வருஷம் கழிச்சுக் கடவுள் அருளாலே உன் அம்மா கருத்தரிச்சா, நீ பிறந்தே!''

''அப்பா! யூ ஹேவ் மேட் மி தி ஹாப்பி யஸ்ட் கேர்ல் இன் தி ஹோல் கன்ட்ரி!'' என்ருள் கலோசனு மெய் சிலிர்த்து.

''இப்பவே அப்படின்னு கல்யாணம் ஆனதும் உலகத்திலேயே ரொம்ப சந்தோஷ மான பெண் நீயாகத்தான் இருப்பே!'' என்ருர் வைத்தியலிங்கம்.

''ஸார்! நாம் ரொம்ப சிக்கலான, சிரம மான காரியம்னு நினேக்கிறதெல்லாம் சில சமயம் எப்படி ரொம்பச் சுலபமா முடியறது பார்த்தீங்களா?'' என்று வியப்பும் மகிழ்ச்சியு மாக வினவினன் தீபக்.

''ஆமாம்'' என்று ஆமோதித்தார் வைத் தியலிங்கம். ''அதே சமயம், நாம் ரொம்ப

---

அவன் எஜமானர் சிறந்த அறிஞர். அனே வரும் போற்றிய துறவி. மக்கள் அனேவரும் சமம் என்றும் அறுவுறுத்தியவர். வேதத்தின் பொருளே எளிதாக மக்களுக்கு விளக்கியவர்.

இந்த நல்ல மனிதருக்கு சமையற்காரன் ஜெகன்னுத். மற்ற தீயவர்களின் தூண்டுதலால் கண்ணுடித் தூளேப் பாலில் கலந்து கொடுத்து விட்டான். சிறிது நேரத்தில் கடுமையான வயிற்று வலியால் துடித்தார். நடந்ததை அறிந்து கொண்டார். நடுங்கிக் கொண்டிருந்தான் ஜெகன்னுதன்.

ஆனுல் எஜமானரோ, ''ஜெகன்னுத்! நீ செய்த தீய செயலுக்காக நீயே வருந்தப் போகின்ருய். நீ இன்னும் இந்த ஊரில் இருந்தால் ஆபத்து ஏற்படும். உடனே தலே மறைவாகச் சென்று விடு'' என்று அவனுக்கு கைச் செலவுக்குப் பண மும் கொடுத்து அனுப்பி வைத்தார்.

அவர்தான் ஆரிய சமாஜம் என்ற இயக்கத்தை ஆரம்பித்துத் தொண்டு செய்த சுவாமி தயானந்த சரஸ்வதி.

— தேவகோட்டை பி. நாராயணன்



சுலபமா முடியப் போகிற காரியம்னு நினேக் கறது பெரிய பிரச்னேகளேக் கிளப்புது. உதாரணமா சத்யாவுக்குப் பொறுப்பைக் கொடுத்தால் அவன் திருந்திடுவான்னு தனம் நினேச்சா. நானும் அதில் நியாயம் இருப்பதா எண்ணினேன். ஆனு என்ன ஆச்சு? மேலே மேலே தப்பு செய்தான். அவன் என் சொந்த மகன் இல்லேங்கிற உண்மையை வெளியிட் டால் அது அதிர்ச்சி வைத்தியமாயிருக்கும்; சொத்து கிடைக்காது போயிடும்னு பயந்து திருந்துவான்னு எதிர்பார்த்தேன். அதுவும் பயனளிக்கலே. இன்னும் அதிகமான தகிடு தத்தங்களில் இறங்கிட்டான். கடைசியா உன்னேப் பழிவாங்க உன் அப்பாவை வேலேயை விட்டு நீக்கினன். என்னேப் பழிவாங்க நான் தான் தொழிலாளர் கோரிக்கைகளே ஏற்க மறுப்பதாகவும் அவன் அவர்களுக்கு நல்ல தையே நினேப்பதாகவும் சொல்லியிருக்கான். எனக்குக் கெட்ட பெயர் வாங்கித்தர ரொம்ப சிரமப்பட்டு வேலே செய்திருக்கான் என் செல்வ மகன்! இப்ப வேலேநிறுத்தப் பிரச்னே இன்னும் மோசமாயிடுத்து!'' என்று வேதனே யும் பரிகாசமும் கலந்து தொனிக்கப் பேசினர் வைத்தியலிங்கம்.

''இது என்ன ஸார் அநியாயம்? நீங்களா தொழிலாளர் விரோதி!'' என்று அந்த அபாண்டத்தை ஜீரணிக்க முடியாமல் கேட் டான் தீபக்.

வெளியே வாசல்புறம் சத்யாவின் குரல் அப்போது கேட்டது. அது ஈனமாக ஒலித்த போதிலும் தாயுள்ளம் சட்டென்று முதலில் கிரகித்துக் கொண்டு பதறியது. ''அம்மா! அம்மா! என்னேக் காப்பாத்தேன் அம்மா'' என்று பலஹீனமாக அவன் உதவி கோருவதைச் செவி மடுத்ததும், ''ஐயோ! சத்யா குரலாட்டமா இருக்கே? எனக்குப் பயமா இருக்கே! நான் என்ன பண்ணு வேன்?'' என்று துடித்துப் போனுள் தன பாக்கியம்.

சத்யா தள்ளாடியபடி நிலேப்படி தாண்டி முன்னேறினன். குடி போதையில் தள்ளாடு கிறன் என்று முதலில் நினேத்தார் வைத்தியலிங்கம். உதவத் தன்னே நெருங் கிய தீபக்கை வெறித்து நோக்கி, ''டோண்ட் டச் மீ யூ பாஸ்டர்ட்!'' என்று வைதான் சத்யா. தன்னேப் பற்றிய ஒரு கய கணிப்பினேத் தாழ்வுணர்ச்சி, எதிரிமேல் சுமத்திப் பார்த்து அற்பத் திருப்தி அடைந்தது. ''அம்மா என்னேக் காப்பாத்தும்மா!'' என்ருன் மறுபடியும்.

இதற்குள் — ஓரிரு விநாடிகளுக்குள் — அவன் உடல்மீது தெரிந்த ரத்தச் சிவப்புக் கறைகளே அனைவரது கண்களும் கண்டு விட்டன. அது அனைவரையும் பிரமிக்கச் செய்து மேலும் சில கணங்களுக்குச் சிலேயாக்கி விட்டது.

அடுத்து, ''சத்யா! என் கண்ணே! உனக்கு என்னடா ஆச்சு?'' என்று அலறினுள் தன பாக்கியம்.

நாற்காலியொன்றைப் பற்றியபடி மேலும் பிரயாசைப்பட்டு இரண்டு அடி எடுத்து வைத்த சத்யா ''என்னேக் குத்திட்டா ணம்மா! ஃபாக்டரி தொழிலாளி ஒருத்தன். என்னேக் குத்திட்டான்! நெஞ்சிலே தோளிலே

## ஆஸ்திக அன்பர்களுக்கு ஓர் வேண்டுகோள்

''சென்னை ஆதம்பாக்கம் பிருந்தாவன் நகரில் உபன்யாசங்கள்—பாராயணம்—வேத வகுப்பு — சம்ஸ்கிருத வகுப்பு — கல்யாணம் போன்றவைகள் நடத்துவதற்கு ஸ்ரீ வேத வ்யாஸ டிரஸ்ட் என்ற நிறுவனம் ஒரு கல்யாண மண்டபம் நிர்மாணிப்பதற்காக முன் வந்திருப்பதைக் கேட்டுச் சந்தோஷிக்கிறோம்.

எல்லா ஆஸ்திக அன்பர்களும் இது போன்ற நல்ல காரியங்களுக்கு தங்களாலான உதவி செய்து பகவானுடைய அனுக்கிரகத்திற்கு பாத்திராகும்படியாக ஆசீர்வதிக்கிறோம்'' என்று ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி ஆசார்ய ஸ்வாமிகளால், அனுக்ரஹித்து தொடங்கப்பட்டிருக்கும் இந்த நற்பணிக்கு பொருளுதவியை கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்:

**The Secretary Sri VEDA VYASA TRUST, (Regd.)**
**''KAMAKOTI'' PLOT No. 35, V. V. COLONY,**
**MADRAS - 600 088**

*Cheque* அல்லது *Bank Draft*ஐ *Cross* செய்து அனுப்பும்படிக் கேட்டுக் கொள்கிறோம். ஒரு தூணுக்கு (*Pillar*) ஆகும் தொகை ரூ. 1001. இதைக் கொடுத்து உதவும் அன்பர்களுடைய பெயர் மேற்படி தூண்களில் பொறிக்கப்படும்.



## BHARAT COMMERCE & INDUSTRIES LIMITED

* India's most experienced manufacturers of Viscose spun Rayon, Acetate spun, Synthetic Blended and Fancy Yarns
* Manufacturers of the sophisticated range of 'NAGDA' Suitings and Shirtings

*Administrative Office:* **225, Jolly Maker Chambers No. 2, 10th Floor Nariman Point, Bombay - 400 021**

Phone: 23 43 49 Grams: RAYONSPIN Telex: 11 2199 SPIN IN

**OUR UNITS:**

1. Bharat Commerce & Industries Ltd, P.O. Birlagram, Nagda (M.P.)
2. Kiran Spinning Mills, Kolshet Road, Thane (Maharashtra)
3. Bharat Commerce & Industries Ltd, Rajpura (Punjab)
4. Sujata Textile Mills, Nanjangud (Karnataka)

*Regd. Office:* **Surya Kiran, 5th Floor, 19 Kasturba Gandhi Marg, New Delhi 110001**

எல்லாம் தாறுமாறு குத்திட்டான்! அம்மா! அப்பா என்னைக் காப்பாத்த மாட்டார்மா! நீயாவது காப்பாத்தும்மா! நான் செத்துக் கிட்டிருக்கேன்'' என்று கயபரிதாபத்துடன், சக்தியற்ற குரலில் அவன் கூற, பாக்கியம் பாய்ந்தோடிச் சென்று மகனைத் தாங்கித் தழுவினாள். அதே கணத்தில் சத்யாவும் மயங்கிச் சரிந்தான்.

அருகிலிருந்த சோபாவில் அவனைக் கிடத்திப் பாசத்துடன் நெஞ்சு, தோள், முகம், வயிறு எல்லாம் தொட்டுத் தடவிக் கொடுத்தாள் தனபாக்கியம்.

''அப்பா என்னைக் காப்பாத்த மாட்டார்ம்மா நீயாவது என்னைக் காப்பாத்தும்மா!'' என்று சத்யா சொன்னதில் சவுக்கடி பட்டவர் போல் திகைத்துப் போயிருந்தார் வைத்தியலிங்கம்.

''ஐயோ! சத்யா! என் கண்ணே! நான் என்னடா பண்ணுவேன்? இப்படி ஒரு பெரிய இடியா என் தலையில் போட்டுட்டியே! கண் திறந்து என்னைப் பாருடா ராஜா!'' என்று வளர்த்த பாசம் அங்கே கதறியது. மகனின் உடலைத் தடவிக் கொடுத்த தன் கரங்கள் சிவப்பாகியிருப்பதையும் பிசுக்கென்று ஒட்டுவதையும் உணர்ந்த தனபாக்கியம், ''ஐயோ! ரத்தம் ஆறாக ஓடுதே!'' என்றாள். கண்கள் இருட்டிக் கொண்டு வரப் பின்னுக்குச் சாய்ந்தாள். வைத்தியலிங்கம் சரேலென்று தரையில் அமர்ந்து தம் மடியில் அவள் சிரத்தைத் தாங்கிக் கொண்டார்.

''தனம்! தனம்!'' என்று பரபரப்புடன் அழைத்தார். முகத்தை அசைத்துப் பார்த்தார். நாடியைப் பிடித்துப் பார்த்தார். பிறகு அவளை நெஞ்சோடு அணைத்துக் கொண்டு தீபக்கை நிமிர்ந்து நோக்கி, துக்கத்தை விழுங்கியவராக நாத் தழுதழுக்க, ''தீபக்! சத்யா மயங்கிக் கிடக்கிறான். இப்போ நீ அவனைத் தொட்டால் நிமிர மாட்டான். கலோவையும் உதவிக்கு வைச்சுக்கிட்டு அவனைக் காரில் ஏற்றிச் சீக்கிரமா ஜி. எச். க்குக் கொண்டு போ! நான் போலீஸுக்கு ஃபோன் பண்ணி அவங்களையும் அங்கே உடனடியா வரச் சொல்றேன். இல்லேன்னா டாக்டருங்க போலீஸ் கேஸைக் கையாளத் தயங்குவாங்க!'' என்றார்.

''சரி சார்! இதோ போறேன்!'' என்றான் தீபக். ''ஆனால் உங்க ஒய்ஃப்...''

''அவளைப் பற்றி நீங்க கவலைப்படவேண்டாம். அவளுக்கு இனி யாரும் உதவ முடியாது. உதவிப் பயனும் இல்லை'' என்று கூறி மாலை மாலையாகக் கண்ணீர் உகுத்து விம்மினார் வைத்தியலிங்கம்.

சரத்துணியால் அன்னையின் நெற்றியை ஒற்றி அவளுக்கு மூர்ச்சை தெளிவிக்கும் முயற்சியில் ஈடுபட்டிருந்த கலோசனா, ''அப்பா! நீங்க என்னப்பா சொல்றீங்க?'' என்று கேட்டவாறு தாயை நெருங்கினாள்.

''வேண்டாம் கலோ! இப்போ அழுவதற்குக் கூட உனக்கு நேரமில்லை! மனசைத் திடமாக வைச்சுக்கிட்டு நான் சொன்னதைச் செய் உம்!'' என்று அதட்டினார் வைத்தியலிங்கம்.

முடுக்கிவிடப்பட்ட யந்திரங்களாக இயங்கினார்கள் கலோசனாவும் தீபக் பாலும்.

(தொடரும்)


# இலவசம்

## LIGHT AND HOOT TORCH LIGHT

ஒரு JOY TOY தயாரிப்பு

வாங்கப் போனால் ரூ. 50 கிரயமுள்ள, ஜாய் டாய் தயாரிப்பான இந்த டார்ச் லைட்டை நீங்கள் முற்றிலும் இலவசமாகப் பெறலாம்!

மூன்று டார்ச் செல்களைக் கொண்டு பிரகாசமான ஒளியை நீண்ட தூரத்துக்குப் பாய்ச்ச வல்லதும், பித்தானை அழுத்தினால் ஸைரன் ஒலி எழுப்பி அக்கம் பக்கத்தாரைக் கூட்ட வல்லதும், மிக அழகான நவீன தோற்றம் உடையதும், உறுதியானதுமான இந்தப் பெரிய டார்ச் லைட்டை நீங்கள் இலவசமாகப் பெறலாம்.

நீங்கள் கல்கிக்குச் சந்தாதாரராகச் சேர்ந்து மூன்று ஆண்டு சந்தாவாக ரூ. 114 அனுப்பி வைத்தால் போதும். உடனே இந்த டார்ச்லைட் உங்களை வந்து அடையும்.

**அல்லது,**

நீங்கள் ஏற்கெனவே கல்கி சந்தாதாரராக இருந்தால் மேலும் மூன்றாண்டுகளுக்குச் சந்தாவைப் புதுப்பித்துக் கொண்டு இலவசமாக டார்ச்லைட்டைப் பெறலாம்.

**அல்லது,**

உங்கள் நண்பர்கள், உறவினர்களுக்கு மூன்று ஓராண்டுச் சந்தாவோ அல்லது ஒரு மூன்றாண்டுச் சந்தாவோ பரிசாக வழங்கி டார்ச் லைட்டை நீங்கள் இலவசமாகப் பெறலாம். கல்கி அனுப்பப்படவேண்டிய விலாசங்களையும் தொகையையும் எமக்கு அனுப்புவதுடன் உங்கள் விலாசத்தையும் மறவாமல் குறிப்பிடவும்.

**அல்லது,**

உங்கள் நண்பர்கள், உறவினர்களிடமிருந்து மூன்று ஓராண்டுச் சந்தாக்களைச் சேகரித்து எங்களுக்கு அனுப்பி வைப்பதன் மூலமும் இந்த இலவசப் பரிசினை நீங்கள் பெறமுடியும்.

**முடிவு தேதி மே 15உ**

நிர்வாகி, கல்கி காரியாலயம், சென்னை-32









கோத்ரெஜ்
அளிக்கும் புதிய
# எவிக்ஸ்
ப்ளூ டிடர்ஜெண்ட்
வில்லை

அழுக்கை அறவே அகற்றுகிறது

பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது

எவிக்ஸ் சக்திவாய்ந்த வெண் பொருள் ஒன்றைக் கொண்டுள்ளதால் உங்கள் துணிகள் முன்பைவிட அதிக வெண்மையையும் அதிக பளபளப்பையும் பெறுகின்றன. நீலம் போன்ற சாதனத்தை இனி நீங்கள் உபயோகிக்க வேண்டியதே இல்லை.

எவிக்ஸ் விசேஷமான முறையில் கலவை செய்யப்பட்டது எவிக்ஸ் ஈரக்கசிவற்றது. கூழ்போல் ஆவதில்லை. பசையற்றது. எவிக்ஸ் ஒரே துண்டாக நிலைத்திருப்பதால் அதை இறுதிவரை உபயோகிக்க முடியும். நீங்கள் அதிகமான துணிகளைத் துவைக்கலாம். கூடுதலான சேமிப்பைப் பெறலாம்.

ஈரக்கசிவற்ற
## எவிக்ஸ்
ப்ளூ டிடர்ஜெண்ட் வில்லை
நீடித்து உழைக்கிறது

CHAITRA-G 97-TAM

**வெ**ல்ல மண்டி வேலாயுதத்தின் கோபம் கொப்பரையில் கொதிக்கும் பாகாகக் கொதித்தது. எவனோ ஒருவன் எழுதியிருந்தாலும் கூடப் பரவாயில்லை. சொந்தத் தம்பியல்லவா எழுதியிருக்கிறான்!

'அன்புள்ள அண்ணனுக்கு.

வியாபார விஷயமாகச் சென்னைக்கு வந்த இடத்தில் தற்செயலாக உங்கள் அருமை மகள் பாப்பாவைப் பீச்சில் பார்க்க நேரிட்டது. எவனோ ஒரு காலிப்பயலுடன் தோள் மேல் கையைப் போட்டுக் கொண்டு திரிகிறாள். பார்க்கச் சகிக்கவில்லை. ரகசியமாக விசாரித்துப் பார்த்ததில் அவள் இதைப் போல் பல பாய் ஃப்ரெண்ட்ஸுக்கு 'டேட்டிங்' கொடுக்கிறாளாம்.

விஷயம் மிஞ்சுவதற்குள் கட்டுப்படுத்தி வைத்தால் குடும்ப கௌரவம் காப்பாற்றப்படும்.

வீராச்சாமி.

எஜமானின் கோபத்துக்குக் காரணம் விளங்காது விழித்துக் கொண்டிருந்த கணக்குப்பிள்ளை கைலாசம் அவரைக் குஷிப்படுத்த முயன்றார்.

''வெல்ல மூட்டையெல்லாம்... நேத்து ராத்திரியே வேலூருக்குப் போயிடுச்சுங்க.''

வேலாயுதம் வள்ளென்று விழுந்தார்.

''அட போய்யா, வெல்ல மூட்டையாம், வெங்காய மூட்டையாம். பாவி ஒன்னால என் குடி முழுகப் போகுதேய்யா... பாப்பாவுக்கு மேல் படிப்பு வாணும்னு நான் அப்பவே முட்டிக்கிட்டேன். நீதான் தாயில்லாப் பொண்ணு அப்பிடி இப்பிடின்னு சொல்லி மெட்ராஸுக்குக் கொண்டு போய் ஆஸ்டல்ல சேர்த்துப் புட்டே...''

''நல்லதைத்தானுங்களே செய்தேன்...''

''நீ நல்லதைச் செஞ்ச நாசமாப் போச்சு... டேட்டிங்கு!... டே... ட்டிங்கு! இந்தக் கடுதாசியைப்பாரு!''

கைலாசம் வெறும் கணக்குப் பிள்ளை மட்டுமல்ல. அந்தக் குடும்பத்தில் அக்கறை கொண்டவனும் கூட.

அவர் வீசி எறிந்த கடிதத்தைப் படித்த அவனுக்கு வியப்பு ஏற்படவில்லை. ஏனென்றால் இது அவன் ஏற்கெனவே பராபரியாகக் கேள்விப்பட்ட விஷயம்தான்...

''படிக்கப் பார்த்தியாய்யா கண்றாவியை! அதிலே எழுதியிருக்கிறதே 'டேட்டிங்குவோ' மீட்டிங்குவோ என்ன எழவுய்யா அது?...''

கைலாசம் குழைந்தான்.

''அதுங்களா... எனக்குச் சரியாத் தெரியாதுங்க... என் தங்கச்சி புள்ளை நாதமுனி சொல்லுவான். பட்டணத்திலே ரொம்ப ஃபாஷனு இருக்கற பொம்பளைக் கொழந்தைங்க, வாலிபப் பசங்களை மீட்டிங்கு பண்றதுக்குத் தேதி குறிச்சு...''

வேலாயுதத்தின் வயிறு பற்றி எரிந்தது.



தொந்தியின் மீது படார் படாரென்று அடித்துக் கொண்டார்.

''அசிங்கம் அசிங்கம். மொதல்லே பட்டணத்துக்குக் கௌம்பறதுக்கு ஏற்பாடு பண்ணுய்யா. அந்தச் சிறுக்கியை என்ன பண்றேம் பாரு.''

''ஏற்பாடு பண்றேன் மொதலாளி. ஆனா ஆத்திரப்படக் கூடாது. காலம் போற போக்குல வயசுக்கு வந்த பொண்ணுகிட்டே வேகத்தைக் காட்டினால் விபரீதமா முடிஞ்சாலும் முடிஞ்சுடும். கொஞ்சம் நிதானமா நடந்துக்கணும். மெட்ராஸ்லே இருக்கற பாப்பாவைச் சுலபமாச் சரிப்படுத்திடலாம்னு தோணுதுங்க.''

அவர்கள் ஹாஸ்டலை அடைந்த போது காலை ஏழரை மணியிருக்கும். வரும்போதே கைலாசம், நாதமுனிக்கு ஃபோன் பண்ணி விட்டுவந்தான்.

பாப்பாவின் அறைக் கதவு உள்ளே தாளிடப்பட்டிருந்தது. கதவைத் தட்டப் போன முதலாளியை அடக்கிவிட்டுக் கைலாசம் சாவித் துவாரத்தின் வழியாகப் பார்த்தான். அவன் முகம் விளக்கெண்ணெய் குடித்ததுபோல் வக்கரித்துக் கொண்டது.

''என்னய்யா நடக்குது உள்ளே? இப்பால வா.''

இப்போது வேலாயுதம் சாவித் துவாரத்தில் பயாஸ்கோப்பு பார்த்தார்.

நிலைக் கண்ணாடி முன்பு நின்றிருந்த அவரது அருமை மகள் பாப்பாவின் கையிலே சவரக் கத்தி! அதை முகத்தருகே வைத்துப் பரப் பரக்கென்று அவன் எதைச் செதுக்கிக் கொண்டிருக்கிறான்?

''பாப்பா!''

சடக்கென்று திரும்பிய அந்த முகத்தைப் பார்த்ததுமே அவருக்கு வெலவெலத்து விட்டது. மங்கோலிய முகம் மாதிரி... ஊஹூம்! அதுகூட இன்னும் லட்சணமாக இருக்கும்...

இந்த முகத்தில் ஏதோ ஒன்று குறைகிறதே என்று அவர் குழம்பிக் கொண்டிருக்கையில் கைலாசம் இளித்துக் கொண்டே சமாதானம் சொன்னான்.

''மொதலாளி, பட்டணத்துலே இதெல்லாம் சகஜமுங்க.''

''எதுய்யா சகஜம்? புருவத்தைச் சிரைச்சிக்கறதா?''

# நைட் கிளப் நாதமுனி



ஏ.கே.பட்டுசாமி

''ஹி ஹி... பதற்றப் படாதீங்க...புல்லு புல்லா மொளைச்சிருக்கிற புருவத்தை லேசா ஒதுக்கி, வில்லு வில்லா எழுதிக்கிறது தான் இப்ப லேட்டஸ்டு ஃபாஷன்.''

அழகாகப் புருவமெழுதி, உதட்டுக்குச் சாயம் தீட்டி ஒயிலாக நடந்து வந்து கதவைத் திறந்த பாப்பாவைப் பளாரென்று அறைய வேண்டுமென்று துடித்துக் கொண்டிருந்த வேலாயுதத்தின் கவனம், வராந்தாவின் மறுகோடியில் கேட்ட பூட்ஸ் ஒலியால் திசை மாறியது.

''வா வா நாதமுனி'' என்று வரவேற்றான் கைலாசம்.

வந்த வாலிபனை ஏற இறங்கப் பார்த்தார் வேலாயுதம்.

இருபத்தெட்டு வயதிருக்கும். ஹிப்பி கிராப், கிருதா, தொங்கு மீசை, குறுந்தாடி கோகோ கண்ணாடி, கன்னுபின்னு வென்று பூப்போட்ட சட்டையிலே இருதயத்தில் அம்பு -குத்தியது போன்ற சின்னம். யானையடி பாண்ட், கையிலே சிகரெட்.

''இவன் தானுங்க நம்ப நாதமுனி, நைட் ளைப்புலே கிட்டார் அடிக்கிறான்'' என்று கைலாசம் அவனை முதலாளிக்கு அறிமுகப் படுத்தி முடிக்கு முன்னரே, பாப்பா புகக் கென்று கையை நீட்டினாள்.

''ஓ... நைஸ் டு மீட் யூ நாதமுனி. ஹவ்டு யூ டு! ஐயாம் ஷோக்கி!''

நாதமுனி அவளது கையைப் பிடித்துக் குலுக்கிக் கொண்டே ஆடுபோலத் தலையை ஆட்டினான்.

''வெர்ரி நைஸ் டு மீட் யூ மிஸ் ஷோக்கி! ஹவ்டி?''

வேலாயுதத்துக்குக் கோபத்தில் உடல் நடுங்கியது. கைலாசம் அவரது கையைப் பிடித்து அமுக்கியிராவிட்டால் என்ன நடந்திருக்குமோ?

கைலாசம் சப்ஜக்டை மாற்றினான்.

''ஏன் பாப்பா, உன் பேர் என்னான்னு சொன்னே சோக்கியா?''

''ஆமாம் மாமா, அப்பா வச்ச பேரு சொக்கி. எல்லாரும் என்னை ஸ்டைலா 'ஷோக்கி'ன்னு கூப்புடுவாங்க. நல்லா இருக்குதா?''

''ரொம்ப நல்லா இருக்குது.உங்க அப்பாவுக்கும் கேக்க குளிச்சியாத்தான் இருக்கும்... நீ என்ன வெளியிலே கௌம்பிக்கிட்டிருக்கியா?''

''ஆமாம் மாமா, அவசரமா ஸ்டடிக்காகப் பொறப்பட்டுக்கிட்டிருக்கேன்... நீங்க எங்கே தங்கியிருக்கீங்க?''

நாதமுனி சமயோசிதமாக இடைவெட்டினான்.

''இது பெண்கள் ஹாஸ்டலாயிற்றே? இங்கே தங்க முடியாது. அதனால ஹோட்டல் அரிஸ்டோவுலே 415ம் நம்பர் ரூம் போட்டிருக்கேன்.''

''ஓகே ஸீ யூ பை!''

அவள் கிளம்பி விட்டாள். 'மரியாதை கெட்ட நாய்' என்று உறுமினார் வேலாயுதம்.

அரிஸ்டோ ஓட்டல் பிரியாணி அற்புதமாக இருந்தது. அதைவிட அற்புதம் நாதமுனியின் அபார உபசரிப்பு.

நிமிஷத்துக்கொருதரம் 'மாமா அது வேணுமா, இது வேணுமா, இதைச் சாப்பிடுங்க, அதைச் சாப்பிடுங்க' என்று – 'வயத்திலே பிறந்த பிள்ளை கூட இப்படிக் கவனிக்க மாட்டான்' என்று வேலாயுதம் ஆனந்தப்படும் அளவுக்குக் குளிப்பாட்டி விட்டான்.

நாதமுனி கூறினான்.

''மாமா இங்கே ரெண்டு வாரம் தங்கி நல்லா உடம்பைக் கவனிச்சுக்குங்க. பாப்பாவைப் பத்திய கவலையை எங்கிட்ட விடுங்க. அவ போகிற போக்கிலேயே விட்டு நாலே நாளிலே சரிப்படுத்தி, ஒங்க காலடியிலே வந்து விழ வைக்கிறேன்.''

''அப்ப, அவளை நான் சந்திக்க வேணுமா!''

''கோபப் படாம கேளுங்க, சில விஷயங்களை, பெத்தவங்க நேரிடையா கண்டிக்க ஆரம்பிச்சா அது பிடிவாதமா மாறி... புரியுதுங்களா... இதுதான் மனோ தத்துவம்.''

வேலாயுதத்துக்கு அவனை ரொம்பப் பிடித்துவிட்டது. 'பிள்ளைன்னா இவன் பிள்ளை. இப்படி ஒரு பிள்ளை எனக்குப் பிறக்கக் கொடுத்து வைக்கலியே' என்று பெருமூச்சு விட்டார்.

வராந்தாவுக்கு வந்து யோசித்தார். இரண்டு வாரம் தங்கச் சொல்லி வற்புறுத்துகிறான்... ஆனா என்கூட இந்தக் கணக்குப் பிள்ளை எதுக்கு?... இத்தனை சுகத்தையும் ஓர் அற்பக் கணக்கன் தம்மோடு பங்கு போட்டுக் கொள்வதை அவர் விரும்பவில்லை.

''யோவ் கைலாசம்! நான் இங்கேயே தங்கி விஷயத்தை முடிச்சுக்கிட்டு வரேன். நீ எதுக்கு எங்கூட இருந்து வீணாவுலே கஷ்டப்படணும். நாளைக்கே ஊருக்குக் கௌம்பு. வியாபாரத்தையும் கவனிக்கணுமில்லே.''

நாதமுனி ஒத்துப் பாடினான்.

''ஆமாம் மாமா, ஐயா சொல்றதுதான் சரி.''

கைலாசம் கெஞ்சினான்.

''தம்பி! தம்பி! ஊருக்குப் போறதுக்கு முன்னாடி ஒங்க நைட்டு கௌப்பை ஒரு வாட்டி பாக்கணும் போல இருக்குது.''

---

சிறுவன்: சார்! நான் பெரியவன் ஆனா பெரிய அரசியல் தலைவரா வருவேன்!

வாத்தியார்: பெஞ்சு மேலே ஏறுடா?

சிறுவன்: ஏன் சார்?

வாத்தியார்: நாளைக்கு மேடைமேல ஏற இப்போ பெஞ்சு மேல ஏறிப் பழகிக்கோ!''

நா. சஞ்சீவி.



''எனக்கு ஆட்சேபனை இல்லே மாமா. ஆனா நம்ப மொதலாளி சம்மதிக்கணுமே!''

வேலாயுதம் நாதமுனியைப் பார்த்தார்.

''இதோ பார், தம்பி, நீ என்னை மொதலாளின்னு கூப்புடறது நல்லால்லே. மாமான்னே கூப்புடு... ஒம்மேலே எனக்குப் பிரியம் விழுந்திடுச்சு.... நீ எங்கே கூட்டிக்கிட்டுப் போனாலும் வர்றேன்.''

மாலையில் வந்தபோது நாதமுனி ஒரு பாலி யெஸ்டர் சூட்டைக் கொண்டு வந்து வெல்ல மண்டியாரிடம் கொடுத்தான்.

''இது எதுக்குத் தம்பி?''

''நான் கிட்டார் அடிச்சதைப் பார்த்து ஒரு வெள்ளைக்காரன் இதை எனக்குப் பிரசண்டாகக் குடுத்தான். அளவு கொஞ்சம் பெரிசு. ஒங்களைப் பாத்ததுமே இது ஒங்களுக்குச் சரியாயிருக்குமேன்னு ஒரு ஆசை. போட்டுப் பாருங்க.''

நாதமுனியே மாட்டி விட்டான். தொப்பை கிப்பை எல்லாம் சரியாக இருந்தது. முகத்திற்குப் பவுடர் பளிச் வேறு.

நிலைக்கண்ணாடியில் தெரிந்த உருவத்தைப் பார்த்து வேலாயுதம் நிலைகொள்ளாமல் தடுமாறினார். வெல்ல மண்டிக் காரரா அது? அசல் வெள்ளைக்காரத் துரை மாதிரியல்லவா?

கைலாசமும் ஒரு பழைய பாண்ட்டை மாட்டிக் கொண்டு தயாரானான்.

இரவு. மங்கிய நிலா வெளிச்சம் போல் எங்கிருந்தோ வழிந்து கொண்டிருந்த விளக்கொளியில் நைட் கிளப்பை நோட்டம் விட்டார் வேலாயுதம். ஆண்களும் பெண்களுமாக எக்கச்சக்க கூட்டம். எல்லாப் பெரிய மனிதர்கள். ஒருவர் இடுப்பிலாவது வேட்டி இல்லே, அதாவது எல்லாமே பேண்ட்தான். நாதமுனியின் முன்யோசனையை மனத்துக்குள் பாராட்டினார்.

சானல் இசையின் மிதப்பில் பட்லர்கள் கொண்டு வந்து வைத்த 'சூஸை' அவரும் கணக்குப் பிள்ளையும் மாடு தொட்டி உறிஞ்சுவது போல் உறிஞ்சினர்.

திடீரென்று மேடையிலே ஒளி வட்டம். டிரம்ஸ் அதிர்ந்தது. ட்ரம்பெட் ஒலித்தது. பேங்கோஸ் செண்டைக் கொட்டு போல முழங்கியது.

ஜவீர் என்று ஜாலரா ஒலிக்கவும் இசை சடக்கென்று நின்றது. நான்கு விநாடிகள் அமைதி.

அரங்கின் மீது இப்போது நீலஒளி. ஜலஜல ஜல ஜலவென்று டேப்பை அசைத்து ஒலியெழுப்பிக்கொண்டே ஓர் அப்ஸரா நங்கை காற்றில் நீந்தி வருபவள் போல் ஜிலுஜிலு வென்று நகர்ந்து வந்து மேடையில் நின்றாள். அவளது கையில் ஒரு மைக்.

''ஒன் — டு — த்ரீ....''

வாத்திய இசை மீண்டும் முழங்குகிறது — இப்போது அவளது பாட்டுக்கேற்ப —

'லார லல்ல லார லல்ல லார லல்லா....
லல்ல லார லல்ல லார லல்ல லாரா....''

குரலா அது? தேன் மழை!... கூடவே காலை உயர்த்தி உயர்த்தி ஆடுகிறாள்.

வேலாயுதம் சடக்கென்று விரைப்பாக உட்கார்ந்தார்.



''இப்போ வெளிநாட்டுப் பொண்ணுகளுக்குப் பிடிச்சது நேரு ஃபாஷன்தானாம்! நல்லாயிருக்கும்ல?''
''மஹாத்மா காந்தி ஃபாஷன்ல வந்தாத்தான் நல்லா இருக்கும்!'' - தேனப்பன்

''ஆன் தி பாங்க்ஸ் ஆஃப் தி கோதாவ்ரி ஈ ஈ.''

தாள வாத்தியங்கள் மடமடமடவென்று அதிர்கின்றன. ஹாலில் ஒரே மகிழ்ச்சி ஆரவாரம்.

எங்கோ கிறக்கத்திலிருந்த அவரது கண்கள் கூர்ந்து கவனிக்கின்றன!... அந்த முகம்!... அவளை எங்கே பார்த்திருக்கிறார்?... எங்கே?..

அவள் பாடிக் கொண்டே மின்னலைப் போலச் சுழன்று ஒரு பக்கமாகத் தலையைச் சாய்த்து நிற்கிறாள். அவருக்குப் பளிச்சென்று நினைவுக்கு வந்து விட்டது... அதே முகம்... அதே விழிகள், அதே நாசி!... பத்து ஆண்டுகளுக்கு முன் இறந்துபோன அவரது மனைவி காமாட்சியே உயிர் பெற்று வந்ததுபோல் இருந்தது.!

''ஐ — லவ் — யூ!''

கூட்டம் பூராவும் ''ஐ லவ் யூ!'' என்று கோஷம் போட்டது.

அவரது கண்கள் கலங்கின.

மறுநாள் காலை கணக்குப் பிள்ளை வண்டியேறி விட்டான்.

காமாட்சி நினைவாகவே இருந்த வேலாயுதம் நாதமுனியிடம் கெஞ்சினார்.

''தம்பி, நேத்து ராத்திரி டான்ஸ் ஆடுச்சே அதும்பேர் என்ன?...

''ப்பூ! இதுக்கா இத்தனை பீடிகை போட்டீங்க.... அது காமினி!... ஃபர்ஸ்ட் க்ளாஸ் டான்ஸர், நல்லா ஆடுச்சில்லே?''

''உம்....'' அவர் கற்பனையில் ஆழ்ந்தார். நாதமுனி அங்கிருந்தே டெலிபோனில் யாருடனோ பேசினான்.

''மாமா! நம்ப பாப்பாவைப்பார்த்தேன்.''

''உம்....''

''விஷயத்தைப் பக்குவமாச் சொல்லியிருக்கிறேன். அநேகமா காரியம் சக்ஸஸ்தான்!''

''உம் ''

ஹோட்டல் காம்பவுண்டில் ஒலித்த காரின் ஹாரன் ஒலியை அவன் அடையாளம் கண்டு கொண்டான். ''மாமா, அவசரமாக் கொஞ்சம் வெளியிலே போகணும். அரை மணியிலே திரும்பிடறேன்.''

அவன் கதவை மூடிக் கொண்டு வெளியேறினான். காமினி கதவைத் திறந்து கொண்டு உள்ளே வந்தாள்.

''ஹலோ! ஹவ் ஆர் யூ ஆர்?''

அவரது முகம் மலர்ந்தது.

''காமாச்சி!''

''இல்லே, என் பெயர் காமினி!''

''நீ அசல் என் காமாச்சியைப் போலவே இருக்கே!''

''அதாவது இறந்து போன ஒங்க மனைவியைப் போல. ... இதைச் சொல்லத்தான் என்னை வரச் சொன்னீங்களா?''

''இல்லே காமாச்சி, நீ என்னை விட்டுப் போயிடாதே. உன் கூடப் பேசிக்கிட்டே இருக்கணும் போலத் தோணுது எப்பவும்.''

காமினி சிரித்தாள்.

''மிஸ்டர்! பேச்சு அத்து மீறிப் போகுது. மொதல்லே இந்தப் படத்தைப் பாருங்க.''

அவள் காண்பித்த போட்டோவில் ஒரு முரட்டு ராணுவக் காரன் கையில் துப்பாக்கியுடன் குறி பார்த்துக் கொண்டிருந்தான்.

''இவர்தான் என் ஹஸ்பெண்ட், பெரிய மிலிடரி ஆபீஸர். இப்ப இந்த ஊரிலேதான் இருக்காரு....''

''ஐயையோ!''

''ஆமாம், நான் காசுக்கு ஆசைப்பட்டு ஆடறவ இல்லே. டான்ஸ் பண்றது என் பொழுதுபோக்கு! ஒரு பாஷன்!''

அவருக்கு உதறல் எடுத்தது.

''இத பாரு தாயி, தயவு பண்ணி நான் ஒளறினதை மறந்து என்னை மன்னிச்சுடு...''

அவள் சற்றே முறுவலித்தாள்.

''அப்படியானா அதுக்கு முன்னாடி எனக்கு ஒண்ணு தெரிஞ்சாகணும்!''

''சொல்லுங்க.''

''கிட்டார் அடிக்கிறானே அந்த நாதமுனி, அவனைப் பத்தி நீங்க என்ன நினைக்கிறீங்க?''

''நெனைக்கிறது என்னத்தே? தங்கக் கட்டியாச்சே அவன். என் புள்ளை மாதிரி!''

''அவனை உங்க மாப்பிள்ளையா ஏத்துக்கிறதைப் பத்தி?...''

வேலாயுதம் சந்தேகத்தோடு பார்த்தார்.

அவள் சிரித்தாள்.

''என்ன பார்க்கிறீங்க, எனக்கும் என் புருஷனுக்கும் உங்க சரித்திரமே தெரியும்! நாதமுனி எங்க குடும்பத்திலே ஒருத்தன் மாதிரி. எங்ககிட்ட எதையுமே ஒளிக்க மாட்டான்.''

''என்ன சொல்றீங்க?''

''உங்க மக அவன் கிட்ட கிட்டார் கத்துக்கணும்னு ஆசைப்பட்டா அவன் கூட ரெண்டு தடவை பீச்சுக்குக் கூடப் போனா!''

''அட அயோக்கியப் பயலே!... இவன் தானா அது?...''

''மிஸ்டர் வெல்லமண்டி! அவனை அயோக்கியன்னு சொன்னா, இத்தனை வயசுக்கப்புறம் பிறத்தியான் பெண்டாட்டிகிட்ட முறை கேடாப் பேசின ஒங்களை எப்படி எடை போடறது?''

ஏதோ ஒரு வெட்டப் பூகம் புறப்படுகிறது!

''அவனுக்குத்தான் என் பெண்ணைக் குடுக்கணும்னு நான் எப்பவோ தீர்மானிச்சாச்சு' அட இந்த நல்ல புள்ளை, மனசைத் தொறந்து எங்கிட்ட ஒரு பேச்சு கேட்டிருக்கப்படாதான்னு ஒரு ஆதங்கம், அவ்வளவுதான்!''

வாசற்கதவு திறந்தது. நாதமுனியும் பாப்பாவும் உள்ளே வந்தனர். தந்தையருகே நேராக வந்த பாப்பா, அவரது பாதங்களில் விழுந்து வணங்கினாள்.

''என்னை மன்னிச்சுடுங்கப்பா... உங்களுக்கு ரொம்ப மனவேதனையைக் குடுத்துட்டேன். நாளைக்கே ஒங்ககூட கிராமத்துக்கு வரத் தயாரா இருக்கேம்ப்பா.''

வேலாயுதத்தின் மனம் வெல்லம்போல் இளகியது.

''என்னம்மா சொல்றே, நீ மட்டுமா வரப் போறே?... உன் வருங்கால புருசன்?''

பாப்பா நாதமுனியைப் பார்த்தாள்.

நாதமுனி பணிவோடு கூறினான்.

''நானும் ஒங்க வெல்லமண்டியிலேயே வேலைக்கு வந்துடறேன் மாமா! எனக்கு இந்தக் கிட்டார் பொழைப்பு அலுத்துப் போச்சு!''

அவர்களுக்குப் பின்னால் சற்று எட்ட நின்ற கைலாசத்தை அப்போதுதான் கவனித்தார்.

''என்னய்யா, கைலாசம், ஊரிலேந்து எப்ப வந்தே?''

கைலாசம் கடகடவென்று சிரித்தார்.

''ஊருக்குப் போனால்ல மொதலாளி திரும்பறதுக்கு! இங்கதான் சுத்திக்கிட்டிருந்தேன்... நாம் வந்த வேலைதான் இப்ப முடிஞ்சிடுச்சே! பொண்ணையும் மாப்பிள்ளையையும் கூட்டிக்கிட்டு நாளைக்கே கௌம்ப வேண்டியதுதான்!''

''இத பாருய்யா, இப்பவே சொல்லிட்டேன். ஊருல வந்தப்புறம் நான் கௌப்புக்குப் போனது, கூல் குடிச்சது எல்லாத்தையும் சொல்லி, குட்டையைக் கொழப்பிடாதே!''

காமினி கிண்டல் செய்தாள்.

''நீங்க மட்டுமா குடிச்சீங்க. அவரும் சேர்ந்தில்லே கொட்டமடிச்சாரு!... சம்பந்தியும் சம்பந்தியும் சத்திரத்துக்குப் போனது?''

கொல்லென்ற சிரிப்பொலி அறையை வியாபித்தது.



நகரத்தின் பல்லாயிரக் கணக்கான முகவரிகளுள் இதுவும் ஒன்றாகப் போய் விடாமல் அழகு இங்கே பராமரிக்கப் படுவதில்தான் இதன் தனித்தன்மையே அடங்கியிருக்கிறது. தலை முடி முதல் பாதம் வரை எந்த உறுப்பானாலும் திருமதி வித்யாவின் கவனமான கண்காணிப்புக்கு உட்படுத்தப்படும்போது மேலும் பொலிவடைகின்றன. குமாரி சாந்தி ஸ்ரீயுடனும், குமாரி மீனுவுடனும் இங்கே இன்முகம் கொடுத்து உரையாடுகிறார், வித்யா.



வித்யா அழகு நிலையம் - குமாரி சாந்தி ஸ்ரீ, திருமதி வித்யா. அமர்ந்திருப்பவர் குமாரி மீனு.

**சாந்திஸ்ரீ:** ஒவ்வொருவருக்கும் ஒரு விதமான அழகைக் கடவுள் தந்திருக்கிறார். அப்படியிருக்கும்போது இதைப் போன்ற ஒரு நிலையம் வைத்து அழகு செய்து கொள்ள வேண்டும் என்ற அவசியம் என்ன?

**வித்யா:** நம்மில் பெரும்பாலோர் அழகு என்பதே தோலின் நிறம்தான் என்று நினைத்துக் கொண்டிருக்கிறோம். அது மாபெருந் தவறு. இன்னும் சிலர் முகத்துக்குப் பவுடர் பூசிக் கொள்வதும், ஆயிரம் ரூபாய் விலையில் அகல சரிகை பார்டர் போட்ட பட்டுப் புடைவ கட்டிக் கொள்வதும், வைர நகைகளை மாட்டிக் கொள்வதும் தான் அழகு என்ற எண்ணத்தில் இருக்கிறார்கள். தலையை எப்படி அழகாய் வாரிக் கொள்வது, எப்படி ! அழகாக நடப்பது, மற்றவர்களுடன் எவ்வாறு பண்புடன் பேசுவது, தேவையற்ற தனது எடையை எவ்விதம் குறைப்பது, முகப் பருக்களை எப்படி அகற்றுவது என்பது போன்ற அழகுணர்ச்சிகளின்றி இருக்கும் ஒரு பெண்ணுக்கு மற்ற வசதிகள் எவ்வளவு தான் இருந்தென்ன? அழகை நாம் சிருஷ்டிக்க முடியா விட்டாலும் பராமரிக்கலாமே?

**சாந்திஸ்ரீ:** இந்தியர்களில் பெரும்பாலானவர்கள் நடுத்தர அல்லது சராசரிக்குக் கீழான பொருளாதாரப் பிரிவைச் சேர்ந்

தவர்கள்தான்: ஆனால் இந்தஅழகுநிலையங்களை சொகுசுக்காரர்கள் மட்டுமே உபயோகப் படுத்திக்கொள்ளக் கூடியவை: ஒப்புக்கொள் கிறீர்களா?

**வித்யா:** ஸாரி... நான் இக்கருத்திலிருந்து அவசியம் மாறுபட்டாக வேண்டும்: நீங்கள் குறிப்பிட்ட அந்த நடுத்தர ஏழை மக்களுக் கும் அழகைப் பராமரித்துக் கொள்ளும் உணர்வு இருக்கிறது, அதற்கு உரிமையும் இருக்கிறது: அழகு நிலையங்களை ஆடம்பர வர்க்கத்தினருக்காக நடத்தும் சிலரை இந்த மக்கள் நெருங்க முடியாதுதான்: ஆனால் என்னைப் பொறுத்தவரை 1964ல் இந்த அழகு நிலையத்தை ஆரம்பித்த நான் அன்றுமுதல் இன்றுவரை பெரும்பாலும் நடுத்தர மக்க ளுக்கே என் அறிவும் திறமையும் உபயோகப் படவேண்டும் என்பதில் கவனமாக இருந்து வருகிறேன்: சில அழகுச் சிகிச்சைகளை ஏழை களுக்கு இலவசமாகவும் செய்ய நான் தயங்கு வதில்லை: தமிழகத்தின் பல பாகங்களிலிருந்து தங்கள் பெண்களை அழைத்து வந்து அவர் களின் தந்தைமார்கள் என்னிடம், ''இவள் அழகில்லாமல், கறுப்பாக இருக்கிறாள்: பெண் பார்க்கப் பிள்ளை வீட்டார் வருகிறார்கள். அதற்குள் ஏதாவது செய்ய முடியுமா பாருங்கள்'' என்றெல்லாம் கேட்கிறார்கள்.

**சாந்திஸ்ரீ:** அலுவலகத்துக்குப் போய் வேலை செய்யும் பெண்களுக்கு இதற்கெல்லாம் எங்கே நேரம் இருக்கிறது?

**வித்யா:** வேலை செய்யும் பெண்களுக்கு நேரமே கிடைப்பதில்லை என்கிற வாதம் பரி தாபத்துக்குரியது: ஏதோ வெந்ததை அவசர அவசரமாக அள்ளிக் கொட்டிக் கொண்டு, ஆறு முழத்தை அப்படியும் இப்படியும் சுற்றிக் கொண்டு, பரபரப்பாக பஸ் பிடிக்க ஓடுவதின் மூலம் தனது அவகாசமின்மையைக் காட்டிக் கொண்டால் அது ரொம்பவும் தவறு: அட்லீஸ்ட் பத்து நிமிஷங்களாவது பெண்கள் — அதுவும் பணிபுரியும் பெண்கள்— சில தேகப் பயிற்சிகளுக்காக ஒதுக்க வேண் டும்: சத்துள்ள உணவை உண்ண வேண்டும். ஆனால் என் அனுபவத்தில் ஒன்றை நான் கவனிக்கிறேன்: பத்து வருடங்களுக்கு முன்பு இருந்ததைவிடத் தென்னிந்தியப் பெண்க ளிடையே அழகுணர்ச்சி அதிகமாகி இருக் கிறது: பெண் டாக்டர்கள், பெண் வக் கீல்கள், மற்ற அலுவலகப் பெண்கள், ஏன், பெண் அரசியல்வாதிகளையும் சேர்த்தே சொல்கிறேன்:

**சாந்திஸ்ரீ:** நீங்கள் உபயோகிக்கும் பல லோஷன்கள் கிரீம்கள் எல்லாமே கெமிகல்ஸ் தானே? அவை சில சமயங்களில் சருமத் துக்குக் கேடு விளைவிக்காதா?

**வித்யா:** ரசாயனக் கலவைகளுடன் கூடிய லோஷன்களும் உண்டு. இயற்கை வைத்தி யத்தின் அடிப்படையில் அமைந்திருக்கும் பல அழகுப் பராமரிப்பு சாதனங்களும் உண்டு. சிலருக்கு கெமிகல்ஸ் அலர்ஜீ என் பது உண்மை. அப்படிப்பட்டவருக்கு மூலிகை எண்ணெய்களை உபயோகிப்பேன்.

**சாந்திஸ்ரீ:** வண்டி வண்டியாக அழகை வைத்துக் கொண்டு — ஆயிரம் ஆயிரமாகப் பணம் தந்து அதைப் பராமரித்துக் கொண்டு ஒரு பெண் இருந்தாலும் அறிவில்லா விட் டால் அப்பெண் எப்படி மதிக்கப்படுவாள்?

**வித்யா:** நீங்கள் சொல்வது ரொம்ப சரி: ஆனாலும் சில சமயங்களில் அறிவுள்ள பெண் களைவிட அழகுப் பெண்கள் புகழ் அடைகி றார்கள் என்ற உண்மையையும் நாம் மறந்து விடக் கூடாது: பல இண்டர்வியூக்களில் இது போல் நேருவதை நான் கண்டிருக்கிறேன். அறிவிருக்கலாம். நிறைய பட்டங்கள் இருக்க லாம். இருந்தாலும் அளவுக்கு மீறிய சதைப் பிடிப்புடன், நடக்கத் தெரியாமல், பேசிப் பழகத் தெரியாமல், வார்த்தைகளை அழகாக உச்சரிக்கத் தெரியாமல் முகத்துக்கு ஏற்றபடி தலை வாரத் தெரியாமல் இருந்தால் அவை மைனஸ் பாயிண்டுகள்தாமே? கல்யாண விஷ யத்தில் அறிவைவிட அழகு வெற்றியடை வதை நாம் நிதர்சனமாகக் கண்டு கொண் டிருக்கிறோமே!

**சாந்திஸ்ரீ:** அறிவால் மட்டும் புகழ்பெற்ற பெண்களும் இல்லாமல் இல்லை. எலினார் ரூஸ் வெல்ட் அழகில்லாதவர்தான். தனது அறி வால் அவர் இமாலயப் புகழ் அடையவில் லையா என்ன? அவரைப் போல் எத்தனையோ பேர். இன்னொரு கேள்வி. இப்போது மேக்கப் மோகம் திரைப்படங்களில்கூட வெகுவாகக் குறைந்து வருகிறது: ஆர்ட் படங்களில் மேக்கப் அவ்வளவாக இல்லை. அப்படிப்பட்ட சில படங்களுக்குத் தேசிய விருதுகூட கிடைக் கிறது.

**வித்யா:** ஐயோ தயவுசெய்து சினிமா மேக்கப்பையும் எனது தொழிலையும் ஒப்பி டாதீர்கள்: இரண்டுக்கும் எந்தவிதசம்பந்தமு மில்லை. இன்னும் சொல்லப் போனால் சினிமா மேக்கப்பினால் காலப் போக்கில் முகத்தின் சருமம் நிச்சயம் பாதிக்கப்படும். (இதைத் தைரியமாக எழுதுங்கள். எனக்கு ஆட்சேபனை இல்லை.) ஆனால் நான் செய்யும் சொளைட்டி



அமெரிக்காவில் 'சங்கேதத் தந்தி' முறை இருக்கிறது. ஒரு டாலர் பணம் கட்டி ஒரு பாடலை நீங்கள் தந்தியில் அனுப்பலாம். உங்கள் நண்பரிடம் அந்தத் தந்தியைக் கொடுக்கும் தபால் காரர், அந்தப் பாடலை ராகம் போட்டுப் பாடிக் காண்பிப்பார். பெரும்பாலும் கண் பார்வை இல்லாதவர்களை உத் சாகப் படுத்தவே இம்முறையைக் கையாள்கிறார்கள்.

—ஸ். —ராமு.

மேக்கப் அப்படி இல்லை. பெண்ணிடம் உள்ள சில குறைகளை மறைத்து அவளை Presentable ஆக்குவது என் வேலை. இதனால் சருமத்துக்கு எந்த விதத்திலும் பாதகமில்லை.

**சாந்திஸ்ரீ:** *''Fashion is ugliness which is known only after three months''* என்று ஒரு முறை ஆஸ்கார் ஒயில்ட் கூறியிருக்கிறார். அவ்வளவு வேகமாக ஃபேஷன் மாறி வருகிறது. அப்படி இருக்கும் போது எதை நீங்கள் அளவுகோலாக வைத்துச் செயல் படுகிறீர்கள்?

**வித்யா:** ஃபேஷன் மாறுவது உண்மை தான். மறுக்கவில்லை. ஆனால் சில நவீன பேஷன்கள் சகிக்க முடியாமல் இருக்கின்றன என்பதுதான் எனது உண்மையான கருத்து. ஒரு பெண்ணுக்கு எந்த அலங்காரம் பொருந்துகிறதோ, ஹேர் ஸ்டைல் அழகாக இருக்கிறதோ, நடை அழகு தருகிறதோ, அது தான் அவள் அழகுக்கு அளவுகோல். வேறென்ன?

சாந்திஸ்ரீ பேசி முடித்தவுடன் தமது இரண்டொரு சந்தேகங்களைக் குமாரி மீனு கேட்டார். ''படுக்கைக்குப் போகுமுன் கடைப் பிடிக்க வேண்டிய சில முக்கிய குறிப்புக்கள் தர முடியுமா?''

**வித்யா:** வெது வெதுப்பான நீரில் சோப் போட்டு முகம் கழுவ வேண்டும். இது மிகச் சாதாரணமான எல்லோரும் செய்யக் கூடிய — ஆனால் செய்யாத ஓர் அழகுக் குறிப்பு.

**மீனு:** எனக்குத் தலை முடி அடர்த்தியாக வளருவதில்லை. என்ன செய்வது?

**வித்யா:** நீங்கள் இருக்கும் தலை முடியை அலை அலையான முடியாக நிரந்தரமாக மாற்றிக் கொள்ளுங்கள். அப்படி மாற்றிக் கொண்டால் நிறைய தலைமுடி இருப்பது போன்ற பிரமையை அது உண்டாக்கும்.

**மீனு:** எனக்கு வயிற்றுப் பகுதியில் நான்கு அங்குலமும் கைச் சதையில் இரண்டு அங்குலமும் குறைக்கப்பட வேண்டும் என்று விரும்புகிறேன். அதற்காக ஸ்டீம் பாத் எடுத்துக் கொள்ளவும், ''ஸ்வீடிஷ் மாஸேஜ்' சிகிச்சைக்காகவும் தினந்தோறும் உங்கள் அழகு நிலையத்துக்கு வரத் தயார். ஆனால் உங்களால் உத்தரவாதம் தர முடியுமா?

**வித்யா:** ஓ யெஸ்... ஒல்லியான உடம்பு பெண்ணுக்கு ரொம்ப அவசியம். எந்தப் புடவையாக இருந்தாலும் ஸ்லிம்மாக இருக்கும் உடலில் அது அணியப்படும் போது அழகாகத் தெரியும். ஸ்டீம் பாத் பற்றியும், ஸ்வீடிஷ் மாஸேஜ் பற்றியும் நீங்கள் தெரிந்து வைத்திருப்பதற்கு எனது பாராட்டுதல்கள். ஒல்லியாக இருப்பதன் மூலம் இருதயநோய் உள்பட பல வியாதிகளை அண்டவிடாமல் பார்த்துக் கொள்ள முடியும். என் அழகு நிலையத்தில் உங்களை வரவேற்க நான் காத்திருக்கிறேன்.

(ஸ்ரீமதி வித்யா அழகுப் பராமரிப்புத் துறையில் பல பட்டங்களைப் பெற்றவர். பாரீஸ், லண்டன், ரோம் இங்கெல்லாம் படித்து 'காஸ்மடாலஜி'யில் நிபுணத்துவம் அடைந்தவர்; அமெரிக்கா, ஸ்விட்சர்லாந்து ஆகிய நாடுகளில் புகழ் பெற்ற அழகுப் பராமரிப்புக் கலைஞர்களிடம் பயின்றவர்.)

சந்திப்பு, ஏற்பாடு, கட்டுரை : விஜய்நிர்மல்
புகைப்படம் : என். எஸ். மணியன்

**பழமொழியும்**

**ஃபாஷன் (புது) மொழியும்!**



※ ஊர் இரண்டு பட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்.

※ ஃபாஷன் வேறுபட்டால் (மாறி விட்டால்) தையல்காரருக்குக் கொண்டாட்டம்.



※ முற்றும் துறந்தவனுக்கு மூக்காடு எதற்கு?

※ நாகரீகத்தை வெறுத்தவனுக்கு ஃபாஷன் எதற்கு?



※ ஆடத் தெரியாதவள் கூடம் கோணல் என்றாளாம்.

※ நாகரீகம் தெரியாதவன் ஃபாஷன் மோசம் என்று பழித்தானாம்.



※ கழுதைக்குத் தெரியுமா கற்பூர வாசனை?

※ காட்டுமிராண்டிக்குத் தெரியுமா ஃபாஷன் பெருமை?



※ மாமியாரும் ஒரு வீட்டு மருமகளே!

※ பழைய ஃபாஷனும் ஒரு காலத்தில் புதிய ஃபாஷனே!

- தங்க. குஞ்சிதபாத



# ஃபேஷன் ஏற்றுமதி

ஆஜானுபாகுவான தோற்றம், தாடிக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் பெரிய சிரிப்பு, கூர்மையாகச் சிந்திக்கும் கண்கள் கொண்ட இளைஞர் தியாகராஜன், சென்னை அஷ்டலட்சுமி ஆடை ஏற்றுமதி நிறுவனத்தின் உரிமையாளருள் ஒருவர். நவீன ஃபாஷன்களில் உடைகளை ஏற்றுமதி செய்பவர் என்ற முறையில் அவரை அணுகியபோது அவர் கூறினார்: "ஃபாஷன் என்பது ஆரம்பித்த இடத்திலேயே திரும்பி வந்து நிற்கும் ஒரு வட்டம்தான் (Cycle). புதிது புதிதாகக் கண்டு பிடிப்பது என்பது இதில் அதிகம் இருப்பதாகக் கூற முடியாது. ஆங்கிலேயரின் ஆதிக்கம் தான் நாம் ஃபாஷன் பற்றிச் சிந்திக்கவே காரணம். நம்மவர்களுக்கு ஃபாஷனைப் பற்றித் தெரியாது. ஆனால் எந்த ஆங்கிலேயரைப் பார்க்கப் போனாலும், கோட், டை முதலியவையோடுதான் போய்ப் பார்க்க முடியும் என்ற நிலையில் மெல்ல இந்தப் பழக்கம் ஃபாஷன் என்ற பெயர் பெற்று வளரத் தொடங்கியது. தமிழ்நாட்டில் ஃபாஷனோ அல்லது ஆடை ஏற்றுமதியோ அதிகம் வளரவில்லை. ஆனால் பம்பாய் மிகவேகமாக முன்னேறி விட்டது. காரணம் பல்வேறு நாட்டினர் அங்கே குழுமுவதுதான்.

"பொதுவாக நமது நாட்டில் ஃபேஷன், உடை ஏற்றுமதி ஆகியவற்றில் ஆர்வம் மிக்கவர் இருந்தும் அவர்களுக்குச் சரியாகப் பயிற்சி பெற வாய்ப்பில்லை. அடிக்கடி மாறி வரும் அயல் நாட்டு ஃபேஷன் பற்றி உடனுக்குடன் இங்கு விஷயங்கள் தெரிய வருவதில்லை. இதையெல்லாம் கவனம் செலுத்தினால் ஆடை ஏற்றுமதியில் நாம் மேலும் பிரகாசிக்கலாம்."

முப்பத்தாறு ஆண்டுகள் அனுபவம் பெற்றவரும் ஃபேஷன் "எக்ஸ்பர்ட்" என்று அழைக்கப்படுபவருமான எம். ஏ. தாஸ் கூறுகிறார்:

"ஃபாஷன் ஒரு வட்டம் அல்லது "சைக்கிள்" என்று தியாகராஜன் கூறுவது சரிதான். 1965ஆம் ஆண்டில் 'பெல்பாட்டம்' என்று அழைக்கப்பட்ட பேண்டுகள் அறிமுகமாயின. ஆண்களின் சட்டை காலர்கள் பெரிதாக நீளத் தொடங்கின. பெண்கள் பெரிய கழுத்துக் கொண்ட கையில்லாத 'ரவிக்' அணிய ஆரம்பித்தார்கள். புடவைகள் பலவகை வண்ணத்துடனும் எம்ப்ராய்டரி வேலைப்பாடுகளுடனும் வரத் தொடங்கின. இதே வருடத்தில்தான் பெண்கள் 'மாக்ஸி' அணியத் தொடங்கினார்கள். மேலும் அவர்கள் பாண்டும் சட்டையும் அதிக எண்ணிக்கையில் ஆண்களைப் போல அணியத் தொடங்கினார்கள்.

"1970க்குப் பிறகு பழைய புஷ்கோட்டும் பாண்டும் மீண்டும் மறுபிறவி எடுத்து "சஃபாரி" என்ற பெயரில் அறிமுகமாகியது. பெண்கள் நீளமான கைவைத்த ரவிக்கையையும், கல்லூரிக் கன்னிகள் எழுத்துக்கள் பல அச்சிடப்பட்ட பனியனையும் தங்களது பாண்டுகளுக்கு ஏற்றதுபோல் அணியத் தொடங்கினார்கள்.

"ஆடைகளின் ஏற்றுமதியைப் பற்றிச் சொல்லப் போனால் 1963 இல்தான் நமது

வரிசை வரிசையாகத் தையல் இயந்திரங்களில் பணியாற்றும் பெண்மணிகள் உதவியோடு ஏற்றுமதிக்கு ஆடைகள் தயாராகின்றன.

திரு நாஸ், உதவியாளர், திரு நாகராஜன்

ஆடைகள் அமெரிக்கா போன்ற பல வெளி நாடுகளுக்கு மிகவும் அதிக அளவில் ஏற்றுமதி ஆகியது. முக்கியமாக இந்தியத் துணிகளில் ''ப்ளீடிங் மெட்ராஸ்'' எனப்படும் துணி வகைகளை வெளிநாட்டினர் மிகவும் விரும்பினார்கள். பின்பு வந்த ஆறு ஆண்டுகளில் ஏற்றுமதி அதிகமாக இல்லை. பிறகு மறுபடியும் ஏற்றுமதி சுறுசுறுப்படைந்தது.

''உற்பத்திச் செலவைக் குறைக்க முடியும் என்ற எண்ணத்துடன் வெளிநாட்டினரும் நமது முதலாளிகளும் சேர்ந்து இங்கு தொழிற்சாலைகள் அமைத்துத் தோல்வி அடைகின்றனர். உண்மையில் இங்கு செலவு மிகவும் அதிகமாகிறது. மேலும் ஏற்றுமதியில் பெரிய வெற்றி அடைய வேண்டும் என்று நினைக்கும் முதலாளிகள் போட்டா போட்டியில் விலைகளை மிகவும் குறைத்து அதற்கேற்ப ஏற்றுமதிப் பொருளின் தரத்தையும் குறைத்துவிடுகிறார்கள். இந்தியாவின் ஆடை ஏற்றுமதித் துறைக்கு இதனால் பெரிய இழுக்கு ஏற்படுகிறது.

''நவீன ஃபேஷனில் ஏற்றுமதி பெருகவும் தரமான தயாரிப்புகளுக்கு வழி செய்யவும் அரசு இத்துறையில் சிறந்தவர்களை இத்தாலி போன்ற வெளிநாடுகளுக்கு ஒவ்வொரு வருடமும் அனுப்பி அங்குள்ள நுணுக்கங்களை அறிந்து வரச் செய்யவேண்டும்.''

பேட்டி: 'சிக்கி'

படங்கள்: உத்ரா



## ஃபாஷன் கவிதைகள்



**அழகே உன்னை ...**

சவுரி முடியாள்
பவுடர் முகத்தாள்
லிப்ஸ்டிக் உதட்டாள்
க்யூடெக்ஸ் நகத்தாள்
ஐடெக்ஸ் விழியாள்
பதமாய் நடித்து
ரசிகர்கள் உருக
திரையின் பின்சென்று
— பல்செட் கழற்றினாள் !



**கிழக்கும் மேற்கும் ...**

இணைப்புக்கு
யார் முதலில்
தூது செல்வது
என்ற தயக்கத்தாலோ
என்னவோ
என் மீசையும் கிருதாவும்
— இன்னமும் இணையவில்லை !

**வைர நெஞ்சம்**



மாக்ஸிகள்
மினிக்கள்
பாரீஸில்
நேரு ஸ்டைல்
எத்தனை வந்தாலும்
எங்களை அசைக்காது
என்பதன் சாட்சியே
— எருமை நாயக்கன் பாளையம் !

**நேற்று இன்று நாளை**

தாத்தாவோ குடுமி
என் அப்பா பாகவதர்
நானோ சம்மர் கிராப்
என் மகன் இப்போது
வளர்க்கிறான் நீண்டமுடி
எதிர்பார்ப்பேன் பேரனிடம்
— குடுமிதனைப் பழையபடி !



**வணங்கா முடி**

தலைமுடி யெனும்
ஆல விருட்சம்
வேர்களை நம்பாது
கன்னம் வழியே
இறங்குகிறது
— கிருதா விழுதுகளே !

**அரச கட்டளை**



நீண்ட நாளான
திருச்செந்தூர்
வேண்டுதலை
உடனே நிறைவேற்ற
ஆணை யிட்டதய்யா
— என் புது ட்ரிம்மர்
கய வெட்டு !

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras-600032. Editor: K. Rajendran

# ஒரே ப்ளக்-பாயின்ட்டில் பல ப்ளக்குகளை பொருத்துகிறீர்களா?

# அவ்வாறு செய்யாதீர்கள்



**மின்சார கருவிகளை தவறாக பயன்படுத்தினால்— பயங்கர தீ விபத்துதான். அதுதான் நீங்கள், அறியாமலே உங்களுக்கும் குடும்பத்தினர்க்கும் தேடிக்கொள்ளும் அபாயம்.**

**மின்சாரம் உங்கள் ஆதாயத்திற்கு, அபாயத்திற்கன்று**

1. பல கருவிகளை ஒரே மின் தொடர்புடன் பொருத்தாதீர்கள். ஓவர்லோடால் தீ விபத்து நேரலாம்.
2. மின் கருவியைப் ப்ளக்-பாயின்ட்டில் பொருத்த மின்சார கம்பிகளை அப்படியே பயன்படுத்தாதீர்கள். ப்ளக்கை உபயோகிக்கவும்.
3. நிர்ணயித்த அளவு ஃபியூஸையே உபயோகிக்கவும்.
4. எலெக்ட்ரீஷியன் வேலையை நீங்கள் செய்யாதீர்கள். ரிப்பேருக்கு, லைசென்ஸ் உள்ள எலெக்ட்ரீஷியனை அணுகவும்.
5. பழுதடைந்த மின் கம்பிகள் உடைந்த ப்ளக்குகள், சுவிட்சுகள் போன்றவற்றை மாற்றியமையுங்கள்.
6. துணிகளை சூடடையக்கூடிய கருவிகளுக்கு அருகில் தொங்கவிடாதீர்கள்.

கத்தரித்து வையுங்கள்.

லாஸ் ப்ரிவென்ஷன் அசோஸியேஷன்—நாங்கள் ஒத்த மனமுடையவர்களுடன் ஒத்துழைக்க விரும்புகிறோம். அப்படிப் பட்டவர்களின் ஈடுபாட்டை வரவேற்கிறோம். தயவு செய்து விவரங்களுக்கு எழுதவும்.




இழப்பைத் தவிர்த்திடுவோம். வளத்தைப் பெருக்கிடுவோம்.

**லாஸ் ப்ரிவென்ஷன் அசோஸியேஷன் ஆஃப் இந்தியா லிமிடெட்**

வார்டன் ஹவுஸ், சர் பி. எம். ரோடு, பம்பாய் 400 001.

CASLPA-8-172 TM

